# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 48] இரக்தாக்ஷி ஆண்டு ஆனித்திங்கள் 16—7—84 [ இதழ்



குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 43 | 10-7-84 | இதழ் 8



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

பிறவாத சென்மம் அழுந்தாத
பிறந்தடியேன் [துன்பம்
இறவாத ஞானமும் உண்டுகொ
யேன்திரும்ப [லோஎளி
அறவா இங் கென்னை இனிஆட்
[டல் போதும்நின்
ஆனந்தத்தே
நறவார் பொழில்மன் மதுரா
நாயகனே. [புரிச்சொக்க

—சொக்கநாதக் கலித்துறை 9

ஆசிரியர் :-

வித்துவான்
இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள்

துணையாசிரியர் :-

மகாவித்துவான்
சி. அருணைவடிவேல்முதலியார்

## உட்பொருள்



அட்டைப்படத்தில் :- ஆடிப்பூரத்தை முன்னிட்டும், ·டிவெள்ளியை முன்னிட்டும், குறுக்கை ஸ்ரீ ஞானம்பிகை

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 43 | இரக்தாக்ஷி - ஆனி - 10—7—84 | இதழ் 8

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே.

— ஞானசம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

# பஞ்சாப் புகட்டும் பாடம்

**வாழ்த்துவோம் :**

மரத்திலுள்ள பலன்களைப் பயன்படுத்த வேண்டுமானல் பக்குவம் தெரிந்து பயன்படுத்தவேண்டும். பருவம் தவறிப் பயன்படுத்துவோமானல் அது சிறக்காது. அதைப்போலத்தான் நம் பாரதப்பிரதமர் திருமதி. இந்திராகாந்தி பக்குவம் அறிந்து பஞ்சாப் விவகாரத்தில் பலன் கண்டுள்ளார். பொற்கோவிலிலிருந்தவாறுபொல்லாச்செயலில்ஈடுபட்டிருந்தசீக்கியக்கலவரக்காரர்களை ராணுவத்தின் துணைக்கொண்டு அடக்கியுள்ளார். இந்த நடவடிக்கையை முன்னரே இந்திராகாந்தி எடுத்திருந்தாலோ அன்றி இன்னும் காலம் தாழ்த்தி விட்டிருந்தாலோ இக்காரியம் இத்தனைச் சிறப்பாகக் கைகூடியிராது. இலண்டனிலிருந்து வெளிவரும் "எகானமிஸ்ட்" "டைம்ஸ்" ஆகிய இதழ்கள் இந்திராகாந்தியைப் பாராட்டியுள்ளன. சீக்கியத் தலைவர்கள் பலரும் கூடப் பாரதப் பிரதமரைப் பாராட்டிக் கடிதங்கள் எழுதியுள்ளதைச் செய்தித்தாள்கள் மூலம் அறிகிறோம். தாய்மைப் பரிவோடும் ஆட்சி அறிவோடும் - பதட்டம் கொள்ளாமல், ஆரவாரம் இல்லாமல் - அதிகச் சேதங்கட்கு ஆட்படுத்தாமல் - இந்திராகாந்தி நிகழ்த்திய திறத்தினை நமது வணக்கத்திற்கு உரிய ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருவுளம்கொண்டு பாராட்டி வாழ்த்தியருள்கிறார்கள்.

**பிரார்த்திப்போம் :**

கத்தியின்றி இரத்தமின்றி, காந்தியடிகளின் தலைமையில் நமது நாட்டில் சுதந்திரப்போராட்டம் நடந்தேறியது. பாரத சுதந்திரப் போராட்டத்தில் பஞ்சாபின் பங்கு பெரிதாகும். இரத்தமின்றி நடந்த சுதந்திரப் போராட்டத்தில் இரத்தம் சிந்திய பெருமை பஞ்சாப் மாநிலத்திற்கு உண்டு. ஜாலியன் வாலா பாக்கிலே பல பஞ்சாபிய வீரர்கள், வெறிகொண்ட வெள்ளையரின் துப்பாக்கிச் சூட்டிற்கு ஆளாயினர். பல வீரர்கள் இரத்தம் சிந்தினர் — பலர் இறந்து போயினர். அவர்களது தியாகம் அத்தனைபெரிது. சரித்திரம் இச்சம்பவத்தைச் சாற்றிநிற்கிறது. இத்தியாக வரலாற்றுச்செயலை எவரும் மறக்கமுடியாது. இத்தகைய தியாகச்செம்மல்களின்வழி வந்தவர்களா இன்று பிரிவினைக்கு வித்திடுகின்றனர்? நினைக்கவே நெஞ்சம் பதைக்கிறது. எப்படியோ பஞ்சாபியர்பலரும், காவலர்பலரும் இதில் உயிரிழந்தனர். அவர்களின் ஆன்மாசாந்தியடையவும் அவர்தம் குடும்பங்கள் ஆறுதல் பெறவும் இறைவனைப் பிரார்த்திப்போமாக!

**பாரதத்தாய் :**

பாரதநாடு பழமையானது — புனிதமானது — பாரில் உள்ள நாடுகளில் திலகம் போன்றது. பாரத தேசத்தைப் பாரதமாதா என்று பாரத மக்கள் போற்றி வணங்கி வருகின்றனர். பல்வேறு மாநிலங்களும் அப்பாரதத்தாயின் அங்கங்கள். நமது நாட்டுச் சிறப்பினை நாம் மறக்கலாகாது. மகாகவி பாரதியார் மனம் உணர்வுறப் பேசுவார் :

" பாரத பூமி பழம்பெரும் பூமி
நீரதன் புதல்வர்இந் நினைவு அகற்றுதீர்
பாரத நாடு பார்க்கெலாம் திலகம்
நீரதன் புதல்வர்இந் நினைவு அகற்றுதீர்! "

பாரதியாரின் காலத்தில் பாரதத்தின் மக்கள் தொகை முப்பது கோடியாகும். பாரதத்தாய் முப்பது கோடி முகங்களை உடையவள். நாம் பலமுற வளமுற அவள் நல்உயிர் ஒன்றே கொண்டிருக்கின்றாள். அவள் பேசும்மொழி எண்ணிக்கையால் பதினெட்டாகும். என்றாலும் அவளுக்குச் சிந்தனை ஒன்றே எனக்கூறி ஒருமைப்பாட்டு உணர்வினை வலியுறுத்துகிறார். நாட்டு மக்களின் கூட்டு உணர்ச்சியைப் பாரதியார் நயம்படக் கூறுகிறார் :

" முப்பது கோடி முகமுடையாள் உயிர்
மெய்ம்புற ஒன்றுடையாள் — அவள்
செப்பு மொழி பதினெட்டுடையாள் எனில்
சிந்தனை ஒன்றுடையாள்.

**'காலிஸ்தான்' கனவு :**

பஞ்சாபில் சீக்கியர்கள் செய்துவந்த கல்வரத்திற்கு அடிப் படைக் காரணம் "காலிஸ்தான்" கோரிக்கையே - தனிநாடு பெற்றுத் தங்கள் இனம் தழைத்து வாழவேண்டும் என்ற சிலரின் கொள்கையே பிரிவினைக்கு வித்திட்டது. அரசியல் சாசனத்தில் பிரிந்துபோகும் உரிமை கோரச் சிறிதும் இடம் கிடையாது. அத்தோடு பிரிவினை கோருவது தேசத் துரோகம் என்று வரையறுக்கப்பட்டுவிட்டது. அமெரிக்காவில் ஆப்ராகாம் லின்கன் ஜனதிபதியாகத் திகழ்ந்த காலத்தில் நீக்ரோக்களைத் தொடர்ந்து அடிமைகளாகவேநடத்த விரும்பிய பிரிவினையாளர்களால் தென் அமெரிக்கப்பகுதி தனியாகப் பிரிந்துவிட்டது. ஆனல் மனிதாபிமானம்கொண்ட மக்கள் தலைவர் ஆப்ரகாம் லின்கன் பல்லாண்டுக்காலம் போர்நிகழ்த்தி அதில் வெற்றிகண்டு அமெரிக்க ஐக்கியத்தையும் கண்ணியத் தையும் பாதுகாத்தார். இஃது ஈண்டு நினைவுகூரத்தக்கது; ஒரு தனிநாடு அமைத்து ஓங்கி வாழ்வதுஎன்பது அத்துணை எளியது அன்று. பாரதம் போன்ற பெருநாடே இன்னும் தன்நிறைவு பெற்றுத் தலைதூக்கி வாழத்தவிக்கின்றது என்றல், பாரதத்தில் இருந்து ஒரு சிறு நாட்டைப் பிரித்து அமைத்து வாழ்வதென்பது நடைமுறைக்கு இயலாத ஒன்ருகும். எனவே காலிஸ்தான் வெறும் கனவாகத்தான் இருக்கமுடியுமே அன்றிக் காட்சியாகத் திகழமுடியாது. தமிழகத்தில் சமணசமயம் இந்துசமய அற நிலையப் பாதுகாப்பின் கீழ் இணைந்து இருப்பது கவனிக்கத் தக்கது. சமணர்கள் வேதத்தை ஏற்காதவர்கள் என்ருலும் அவர்களிடம் பல அம்சங்களில் இந்து ஒருமை நிலை காணப் படுகிறது. மதரீதியாகச் சமணமதம் இந்துமதத்தோடு இணைக் கப்படவில்லை என்ருலும் அரசியல்ரீதியாக இஃது இந்துமதத் தோடு இணைக்கப்பட்டே உள்ளது. அதுபோலத்தான் சீக்கிய மதமும். சீக்கியரும் பல இந்துமதப் பழக்க வழக்கங்களைச் சார்ந்திருக்கும் சால்பு குறிப்பிடத்தக்கது.

**பஞ்சாப் விவகாரம் ஒரு பாடம் :**

பாரத மக்களுக்குப் பஞ்சாப் விவகாரம் ஒரு பாடமாகும், இதனை ஒரு படிப்பினை என்றே கருத வேண்டும். இனவெறி, மொழிவெறி, மதவெறி போன்றவை இந்தியாவின் ஐக்கியத் திற்கு இடர்ப்படுத்துவனவாகும். பெற்ற சுதந்திரத்தை நாம் பேணிக்காக்கவில்லை என்றல் பாரதநா? பலவீனப் பட்டுப் போகும். தீய சக்திகள் எங்குத் தோன்றினலும் அவற்றை அடக்கியே தீரவேண்டும். பயிர்த்தொழில் புரியுங்கால் களை முளைத்தால் அதைக் களைந்து எறிவது அவசியமாகும். அதே போல் நாட்டு ஐக்கியத்திற்கு நலிவுசெய்யும் எவரையும்

நாடடுநலன்கருதி அடக்கியாள்வது அரசியல்நல்லறமேயாகும். இச்செயலையே வள்ளுவப்பெருந்தகை " பைங்கூழ் களைகட்டதனோடு நேர் " என வரையறுத்துக் கூறியுள்ளார்.

பாரதப் பிரதமர் இந்திரா காந்தியிடம் பல குறைகள் இருக்கலாம். என்றாலும் நாட்டின் ஐக்கியத்திற்கு இடர்ப்பாடு தோன்றும் காலத்து – அடைந்த சுதந்திரத்திற்கு ஆபத்து வரும்போது – இந்திய மக்கள் அனைவரும் ஒரு முகமாகநின்று இந்திரா காந்தியின் கையை வலுப்படுத்தவேண்டும். இன்றேல், நமக்கு ஆளத்தெரியாது என்று சொன்ன ஆங்கிலேயர் வாக்கை மெய்யாக்கி இழிநிலை எய்தநேரும். இந்நிலைக்கு ஆளாகாமல் ஆங்கிலேயர் வாக்கைப் பொய்யாக்கி வாழமுயலவோமாக. நம்மில் ஆயிரம் கருத்துவேறுபாடுகள் இருக்கலாம். ஆனால் அந்நியனுக்கு இடம்கொடுக்கலாகாது. நாம் அனைவரும் ஒரு தாயின்வயிற்றில் பிறந்தவர்கள்–பாரதமாதாவின் பவித்திரமான பிள்ளைகள். அண்டைநாடுகளோ அன்றி வேறு அயல் நாடுகளோ அண்டவிடலாகாது. பிரிவினை எண்ணம் அரும்பும்போது பிறநாட்டார் உதவியை நாடுவது இயல்பான செயலாகிவிடுகிறது. இதைப் பஞ்சாப் விவகாரத்தில் பார்க்கின்றோம் அல்லவா ? ஆகையால் இந்தியர் அனைவரும் ஒற்றுமையாக இருக்கவேண்டும்–ஒற்றுமையை வளர்க்கவேண்டும். ஒற்றுமையுணர்வு பெற்று வாழ்தல் இன்றியமையாத ஒன்றாகும்.

" ஒன்றுபட் டால்உண்டு வாழ்வு – நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வு
நன்றிது தேர்ந்திடல் வேண்டும் – இந்த
ஞானம் வந்தால் பின் நமக்கேது வேண்டும் "

என்பது பாரதியின் பொன் மொழியாகும்.

## நேசமுடன் வாழ்வோம் :

ஒரு நாடு ஓர் உயிருள்ள உடம்பு போன்றது. நாட்டில் ஒரு பகுதிக்கு வரும் கேடு நாட்டின் மற்ற பகுதிகளையும் பாதிக்கவே செய்யும். எங்கோ நம் நாட்டில் ஓரிடத்தில் ஏற்படும் சீர்குலைவு மொத்தத்தில் பாரதநாடு முழுமையும்பாதிக்கும். நம்சிந்தனையை ஆக்கப்பணிகளில் செலவிட்டால் - ஊக்கமொடு செயற்பட்டால்அஃது எல்லோருக்கும் நல்லதாகும். பஞ்சாப் புகட்டும் பாடத்தை நெஞ்சாரக் கருதி நேசமொடு வாழ்வோமாக ! உலகமே ஒரு குடும்பம். அதில் ஒருபங்கை ஆளும் பங்காளியே பாரததேசம். நாமும் பிறர் பங்கில் புகமாட்டோம். பிறபங்காளிகளையும் பாரதத்தில் புகவிடமாட்டோம். இந்நிலையில் உலக சகோதரபாசத்துடன் ஒருவருக்கொருவர் உதவிபுரிந்து உயர் வாழ்வு வாழ்வோமாக!

" பெற்ற தாயும் பிறந்த பொன் னாடும்
நற்றவ வானினும் நனிசிறந் தனவே " — பாரதியார்.

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

திரிசிரபுரம் சைவசித்தாந்த சபையின் நூற்றாண்டு விழாவில் விழாமலரை வெளியிட்டு வழங்கியருளிய

# ஆசியுரை

27—5—84

"நன்றுடையானைத் தீயதிலானை நரைவெள்ளே
றொன்றுடையானை யுமையொருபாக முடையானைச்
சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூறவென்னுள்ளங் குளிரும்மே"

**விழாவும் விரதமும் :**

இன்றையதினம் திரிசிரபுரம சைவ சித்தாந்த சபையின் நூறாவது ஆண்டு நிறைவு விழாவும் நூற்றொன்றாவது ஆண்டுத் தொடக்க விழாவும் இங்கே நடைபெறுகிறது. ஒரு நிறைவு மற்றொன்றின் தொடக்கமாகும். ஓர் அந்தம் மற்றொன்றிற்கு ஆதி ஆகும். சிவஞானபோத முதல் நூற்பா "அந்தம் ஆதி என்மனார் புலவர்" என்று கூறும்.

1884 ல் இச்சபை தொடங்கப் பெற்றுள்ளது நூறாண்டுக் காலம் சீரோடும் சிறப்போடும் இது இயங்கி வந்துள்ளது. ஞானியார் சுவாமிகள், வாலையானந்த சுவாமிகள், திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம்பிள்ளை, நாவலர் வேங்கடசாமி நாட்டார், மா மகேசுவரம்பிள்ளை, நடேச முதலியார் கி. ஆ. பெ. விசுவநாதன் போன்றோர் இருந்து வளர்த்த சபை. இந்தசபையின் நூற்றாண்டு விழாக் கொண்டாடும் இந்நாள் சைவர்கள் அனைவர்க்கும் ஒரு புனிதமான நாள்; நினைவில் வைத்துக் கொள்ள வேண்டிய நாள். இதுபோன்ற நாட்களில் சில சங்கற்பங்களை மேற்கொள்ளுதல் நலம் தரும். இன்னது செய்வேன்; இன்னது தவிர்வேன் என்று திட்டமிட்டு வாழ்தலே விரதம் மேற்கொள்ளுதலாகும்.

அதனைத் தொடர்ந்தும் கடைப்பிடித்தல்வேண்டும். வாழ்க்கையில் எளிய சில அடிப்படை நெறிமுறைகளையாவது ஒவ்வொருவரும் பின்பற்றுதல் நல்லது. மிக எளிய மூன்று வழி முறைகளை மேற்கொள்ளவும், மூன்று வழிமுறைகளைத் தவிர்க்கவும் ஈண்டுச் சிந்திப்போம்.

## மூன்று நெறி முறைகள் :

செய்ய வேண்டுவனவற்றுள் ஒன்று: காலையில் எழுந்தவுடன் முகம், கை, கால்களைக் கழுவித் தூய்மைசெய்து திருநீறு பூசி "சிவ சிவ" மந்திரத்தைக் கூறுதல்; தேவாரப் பாசுரங்களை ஒன்றிரண்டு ஓதுதல்.

காலையில் எழுந்தவுடன் இன்று பலரும் உடல்வளர்ச்சிக்குரிய உணவுண்ணும் செயலில் இறங்கி விடுகின்றனர். உடலை வளர்க்கும் நோக்கமே உடம்பில் உள்ள உயிரை வளர்க்கத்தானே! உடலை வளர்க்கின்றேன் என்று கூறிப் பல முறை உணவுண்ணுதல் கூடாது. அதிகமாக உணவுண்பவனுக்கு நல்லெண்ணம் தலை தூக்காது. யானைக்கு அதிக உணவு மதம் பிடிக்கச் செய்யுமாப் போலே மனிதனுக்கு அதிக உணவு தீயவழிக்கு அவனை இட்டுச் செல்லும். எனவே உயிரை வளர்க்ககாலையில் எழுந்தவுடன் ஆண்டவனின் ஐந்தெழுத்து மந்தரத்தை ஓதி, பின்னர் உடல் வளர்ச்சிக்குரிய உணவை உண்ணுதல் உயர்வுடைத்து.

"படைக்கல மாகவுன் னாமத் தெழுத்தஞ்செ னாவிற் கொண்டேன்
இடைக்கல மல்லே னெழுபிறப் பும்முனக் காட்செய்கின்றேன்
துடைக்கினும் போகேன் தொழுது வணங்கித் தூநீறணிந்துன்
அடைக்கலங் கண்டா யணிதில்லைச் சிற்றம் பலத்தானே"

என்ற பாடலை ஓதியவாறே திருநீறுபூசி இறையருளைச் சிந்தித்தல் நலம் தரும்.

இரண்டாவது, தினமும் காலையிலும் மாலையிலும் அல்லது ஒருவேளையாவது திருக்கோயிலுக்குச் சென்று, "சங்கரா சய சய போற்றி போற்றி" என்று இறைவனைத் துதித்தல் இன்றியமையாததாகும். ஐந்து மணித்துளியாவது மனம் ஒன்றி வழிபாடு செய்தலே அனைவரும் நாட்கடனாகக் கருதுதல் அவசியமாகும்.

மூன்றாவது, தெய்வத்தைப் பற்றிய தத்துவங்களைத் தெரிந்து தெளிதல் வேண்டும். இதற்கு வாரத்திற்கு ஒருமுறை அல்லது மாதத்திற்கு ஒருமுறையாவது கூட்டுவழிபாடு செய்தல் நல்லது. கூட்டுவழிபாடு மன ஒருமைப் பாட்டை வளர்க்கும். வழிபாட்டு

நேரங்களில் கற்பூரம், சாம்பிராணி போன்ற பொருள்களைக் கொண்டு மேளதாள முழக்கத்துடன், தூபதீபங்கள் காட்டும் பொழுது, மன ஒருமைப்பாட்டுணர்வு வருகிறது. இது பலரும் அனுபவத்தில் உணர்ந்திருக்கக்கூடியது. இதைக்கருதித்தான் நம்முன்னோர்கள் கூட்டுவழிபாடு என்றும் மேளதாளமுழக்கங்களுடன் வழிபாடு என்றும் வைத்துள்ளனர். சிலநிமிடங்களாவது தக்கார் ஒருவரைக்கொண்டு சொற்பொழிவு நிகழ்வித்தல் வேண்டும்.

ஒரு கிறித்துவ அன்பர் ஒருமுறை கூறினர்:– "நான் உங்கள் கோயிலுக்குள் வந்திருக்கின்றேன், அங்கே நிகழும் வழிபாடுகளினல் மன ஒருமைப்பாடு கிடைக்கிறது" என்று கூறினர். எனவே கூட்டுவழிபாட்டுடன் நாம் வணங்கினல் மன ஒருமைப்பாடு கால வளர்ச்சியில் வருவதும் தெய்வங்களைப்பற்றிய தத்துவங்கள் தெளிவதும் சாத்தியமாகும்.

இம்மூன்று நெறிமுறைகளையும் சைவர்கள் ஒவ்வொருவரும் தினமும் கடைப்பிடித்தால் நன்மை கிட்டும்.

### விளம்பரம் ஓர் குறிப்பு :

இன்றைய விழாவை ஒட்டி, இன்று, ஒருமலர் வெளியிடப் பெறுகிறது. விழாமலரில் விளம்பரங்கள் இருப்பது இயற்கை. விழாமலரில் விளம்பரம் கொடுத்துத் தங்கள் வியாபாரம் பெருகவும் அதேசமயம் விழாமலர் வெளிவருதற்கும் பொருள் உதவியும் அளித்த வியாபாரிகளின் வணிகம் மென்மேலும் வளர்க ! என்று வாழ்த்துதல் நன்றிக்குரிய செயலாகும்.

இம்மலரில் சைவ சித்தாந்தம் பற்றிய 17 கட்டுரைகள், 29 வாழ்த்துக்கள் உள்ளன.

### ஆறுமுகநாவலர் அரும்பணி :

இந்த சந்தர்ப்பத்தில் ஆறுமுகநாவலர்படத்திறப்பும் இங்கு நிகழ்த்தப்பெற்றுள்ளது. ஆறுமுகநாவலர் சென்ற நூற்றாண்டில் தமிழகத்தில் சைவம் வளர்த்தோரில் தலைமை சான்றவர், யாழ்ப்பாணத்துநல்லூரில் தோன்றியவர். நைட்டிக பிரமசாரியாகச் சிதம்பரத்தில்வாழ்ந்தவா. சிவபூஜாதுரந்தரர். தான் 1884ல் இச்சைவ சித்தாந்த சபையைத் தொடங்கிவைத்த பெருமைக்கு உரியவா. இவர் வடலூர் வள்ளலார் இராமலிங்க அடிகள் மீது வழக்குத்தொடுத்தவர். கொள்கைகளை விடாப்பிடியாகக் கொண்டவர். பால பாடங்கள் நான்கும், சைவ வினவிடை இரண்டும் எழுதியவர். செய்யுள் நடையிலிருந்து உரைநடையாக வசனங்கள் சில எழுதியவர். கந்தபுராண வசனம், பெரிய

புராண வசனம், இவர் எழுதியவை. ஒரு நிறுவனம் செய்யத் தக்க இத்தகைய பணிகளைத் தனியாக இருந்து செய்தவர். இவரின் சைவப் பணிகளைப் பாராட்டித் திருவாவடுதுறை ஆதீனம் பதினாறுவது குருமகாசந்நிதானம் அவர்கள் ' நாவலர் ' என்னும் பட்டம்வழங்கினார்கள். இத்தகைய அருஞ்சிறப்புக்கள் பல பெற்ற நாவலர் திருவுருவப்படம் இங்கே இன்று திறக்கப் பட்டிருப்பது இச்சபைக்கு மேலும் சிறப்பினைத்தரும்.

**சைவ சித்தாந்தக் கொள்கைகள் :**

இனி, இந்த சபையின் குறிக்கோளாகிய சைவ சித்தாந்தம் பற்றியும் இங்கே ஒரு சிறிது சிந்திப்போம். சைவசித்தாந்தக் கொள்கையைப் பற்றியும் தத்துவங்களைப் பற்றியும் அயல் நாட்டவர் 150 ஆண்டுகட்கு முன்பே ஆய்ந்து எழுதியுள்ளனர். சைவ சித்தாந்தம் மூன்று அடிப்படைக் கொள்கைகளைக் கொண்டது. ரிக்வேதமும், உபநிடதமும் சைவ சித்தாந்த உண்மைகளைப் பேசுகின்றன. வேதம், ஆகமம், இதிகாசம், புராணம், தோத்திரம், சாத்திரம், நீதிநூல்கள் அனைத்தும் ஒரே கருத்தையே வேறுவேறு வடிவத்தில் கூறுகின்றன. அவற்றை புரிந்து கொள்ள வேண்டுமானால் வாழ்க்கை முழுவதையும் அர்ப்பணிக்க வேண்டும்.

**இரண்டு ஞானம் :**

பதி, பசு, பாசம் என்னும் மூன்றும் என்றும் உள்ள உண்மைப் பொருள் என்று சைவ சித்தாந்தம் வலியுறுத்திக் கூறுகிறது. ஞானத்தைக் கலைஞானம், மெய்ஞ்ஞானம்என இரண்டு வகையாகப் பிரிக்கலாம். கலைஞானம் நிலை மாறுபாடுடையது; மெய்ஞ்ஞானம் நிலை பேறுடையது. இவ்விரண்டு ஞானங்களையும் திருஞானசம்பந்தர், உமையம்மையின் ஞானப்பாலுண்ட ஞான்று பெற்றார் என்று சேக்கிழார் பாடியருளுகின்றார்.

" சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங் கியஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவ முதல்வர் சம்பந்தர் தாம் உணர்ந்தார் அந்நிலையில் ".

என்னும் இப்பாடலில் நான்கு ஞானங்களைக் கூறியுள்ளதாகப் பலர் கருதுகின்றனர். அது தவறு. இரண்டு ஞானங்களே கூறப் பெற்றுள்ளன. சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞான மாகிய உவமையிலாக் கலைஞானம் ஒன்றும், பவமதனை அற மாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானமாகிய உணர்வரிய மெய் ஞானம் பிறிதொன்றுமாகக் கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளல் வேண்டும்.

### தெய்வங்கள் பல ஏன் ?

பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் இறைவனைக் கண்டு வழிபட இயலாது. "பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரன்" என்று சிவஞானசித்தியார் கூறுவதுகொண்டு இதனை உணரலாம். எனவே பதிஞானத்தால் இறைவனைக்காணவும் வழிபடவும் இயலும் என்பதனை உணரலாம். சூரிய ஒளிகொண்டுதான் சூரியனைக் காணுதல் முடியும். கணக்கறிவுகொண்டுதான் கணக்கைப் புரிந்துகொள்ளமுடியும். அதுபோல் இறையருளாலேதான் இறைவனை அறிய முடியும். அவ்விறைவனே 'பதி' என்று குறிக்கப்பெறும். பதி ஒருவர்; என்பது சைவசித்தாந்தக் கொள்கை. இன்று தெய்வங்கள் பல உள்ளனவே! அதற்குக் காரணம் என்ன ? என்று சிலர் கேட்கின்றனர். காவிரி ஒன்றுதான்; அது தஞ்சையில் புகுந்து நஞ்சைக்குப் பயன்படுகிறபோது பல பெயர்களையும் பெறுகிறது; ஆங்காங்கே பல ஆறுகளாகவும், கால்வாய்களாகவும் ஓடுகிறது. அதற்காகக் காவிரியே பல என்று கூற இயலுமா ? அதுபோலவே ஆண்டவனின் அருள் வெள்ளத்தைத்தாங்கி அவரவர்கள் மனநிலைக்கேற்ப ஓடிவந்து அருளும் நிலையையும் வடிவங்களையும்கொண்டே தெய்வங்கள் பல என்கின்றோம்.

அடுத்துப் பசு என்பதுதான் உயிர். உயிர்ஒன்றல்ல பலபல மூன்றாவது பாசம். இது கட்டு, தளை என்று பெயர்பெறும். பசு, பதியை அடையத் தடையாக இருப்பது இது.

### அநாதியான பொருள்கள் :

இப்பதி, பசு, பாசம் மூன்றும் நித்தியம்; என்றைக்கும் உள்ள பொருள்கள். அநாதி என்பர். அநாதி என்பது ஆதி அந்தம் இல்லாதது.

### பதி அணுகிற் பசு, பாசம் அணுகா :

கடவுள், உயிர்களையும் பாசங்களையும் படைக்கவில்லை. அவர் உயிர்களுக்குரிய கருவி கரணங்களையே படைத்து அளித்துள்ளார். அக்கருவி கரணங்களைக்கொண்டு பசு, பாசங்களைவிட்டு நீங்கிப் பதியை அடைதல்வேண்டும். இதுவே சைவசித்தாந்தத்தின் முடிந்த கொள்கையாகும். திருமூலரும் இக்கருத்தில்தான்,

"பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போற்பசு பாசம் அனாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாசநில் லாவே"

என்றருளுகின்றார். இப்பாடலில் "பதி அணுகில் பசுபாசம் நில்லாவே" என்னும் தொடருக்கு நுட்பமாகப் பொருள் காணுதல் அவசியம். பதி அணுகில் பசு பாசம் இரண்டும் நில்லா என்று ஆற்றொழுக்காகப் பொருள்கொண்டுவிட நேரும். இது தவறு, பதி அணுகில் பசு என்ற இடத்தில் நிறுத்தி பாசம் நில்லா என்று பொருள்காணுதலே பொருத்தமாகும்.

**தாமேதரும் வள்ளல் :**

அப்பதியையும் பசு, தன்முயற்சியால் சென்று அணைய முடியாது. "தாமே தருமவரைத் தம்வலியினுல் கருதல் ஆமோ? இவனுர் அதற்கு?" என்று உமாபதிசிவமும் அருளினர். 'அவன் அருளாலே அவன்தாள் வணங்கி' என்றார் மாணிக்கவாசகரும், நம்பியாண்டார்நம்பிகள்,

"என்னை நினைந்து அடிமைகொண்டு என் இடர்கெடுத்துத்
தன்னை நினையத் தருகின்றான்"

என்று அருளினர்.

இத்தகைய பதியின் அருளால் உயிர்கள், பாசம் நீங்கி உய்திபெறுதற்கு இதுபோன்ற சபையின் செயல் முறைகள் மேலும் பயன்படுமாஞல் அதுவே உண்மைப்பயனாகும்.

**வாழ்த்து :**

இச்சபையின் தலைவராக இருந்து பணிகள்பல செய்துவரும் அன்பர் திரு. ப. முக்கப்பிள்ளை அவர்களின் சேவை பாராட்டக் கூடியது. இந்நூற்றாண்டுவிழாக் குழுவின் தலைவராக இருந்து அரும்பணி செய்துள்ள அன்பர் "முத்தமிழ்க்காவலர்" திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களின் செயல் மகிழ்ச்சிக்குரியது. அவர்கள் தலைமை தாங்குவது சாலப்பொருத்தமானதாகும்.

இச்சபையின் நூற்றாண்டுவிழா இனிது நிகழ்ந்தேறவும், இன்னும் பல்வேறு பணிகளை இச்சபை செயற்படுத்தி மென் மேலும் வளர்ந்தோங்கவும் இவ்விழாவில் பங்குபற்றியுள்ள அன்பர்களும் பிறரும் நலம்பல பெற்று நீடுவாழவும் எல்லாம் வல்ல செந்தமிழ்ச்சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

வாழ்க சித்தாந்த சபை!

வளர்க சைவநெறி!

## தருமையாதீனம் அனைத்துலக சைவசித்தாந்த முதற் கருத்தரங்கம்

# தலைமைப் பேருரை

## மேதகு. பா. இராமச்சந்திரன்

கேரள மாநில ஆளுநர்

அன்புடையீர்,

வணக்கம். தருமபுர ஆதீனமும், திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழகமும் இணைந்து அனைத்துலக சைவ சித்தாந்த முதல் கருத்தரங்கம் நடத்துகிறது என்பது பொன் மலர் மனம் பெற்றது போன்று சிறப்புடையதாகும்.

உலகத்து உயிர்ப்பொருட்கள் யாவையும் இன்ப நுகர்ச்சி யையே குறிக்கோளாய்க் கொண்டு வாழ்வன. இன்பம் எனப்படுவது, உலகத்துப் பொருள்களினால் உயிர்களிடத்து உண்டாகும் பற்றையே துணையாய்க் கொண்டு நிகழ்ந்திடும் சிற்றின்பம் எனவும், கடவுளை உயிர்பற்றிக்கொண்டுநடத்தலால் விளைந்திடுவதைப்பேரின்பம்எனவும் இருவகைப்படும். கடவுள் என்றும் மாறாத இன்ப மயமாய் உள்ளார். ஆதலால் அவரைப் பற்றுவதால் உண்டாகும் வாழ்க்கை பேரின்ப வாழ்க்கை. அப்பேரின்பமானது என்றும் மாறாத நிலைத்த இயல்பினை உடையது. பேரின்பத்தை அடைவதற்கான வழியே சமயம்.

மக்களின் தன்மை, பழக்க வழக்க ஒழுக்கங்கள் அறிவு, அனுபவம்முதலியவற்றுக்குத்தக்கபடி சமயங்கள் அமைந்தன. எந்த சூழ்நிலையிலும், எவ்விடத்திலும், எந்த பொழுதிலும் சமயம் ஒன்றே மக்களுக்கு சாந்தத்தைக் கொடுப்பன; ஒற்றுமையை ஏற்படுத்துவன; உண்மையை ஆராயச்செய்வன; பண்பைப் பெருக்குவன.

சமயம் என்பது பொழுது, காலம் எனவும் பொருள் தந்து நிற்கும்; இத்னைத் தாயுமான சுவாமிகள் 'ஒன்றாய்ப் பலவாய் உயிருக்குயிராய் ஆடும் கருணை பரஞ்சோதி அருளைப் பெறு வதற்கு அன்பு நிலைதேடும் பருவம் இது கண்டீர் சேரவாரும் செகத்தீரே' என்கிறார்.

உலகில் உள்ள எல்லோரும் நலமாக வாழவேண்டுமானால் ஒழுங்கும், கட்டுப்பாடும் மிகவும் இன்றியமையாதது. ஒழுங்கு அகத்தொழுங்கு, புறத்தொழுங்கு என இருவகைப்படும். அவற்றில் அகத்தொழுங்கைப் பெறுதல் சமயத்தினால்தான் இயலும். புறத்தொழுங்கு காக்கப்பெறுதல் ஆட்சி முறையால் இயலும்.

அகத்தொழுங்கினைக் கடவுள் உணர்வினால் காத்துவரும் சமயம், புறத்தொழுங்கை மனிதன் ஆற்றலால் காத்து வரும் அரசியல் ஆட்சி முறைக்குப் பலவகையிலும் துணை செய்கிறது. உதாரணமாக களவு செய்வோனது கையையும், காலையும் சிறைகாக்கும் காப்பினால் திருத்துவது அரசியல் ஆட்சி முறை. ஆனால் களவு செய்யப் புகுவோனது நெஞ்சைத் திருத்தி, அதன் வழியாக கை கால்களை நிறைகாக்கும் காப்பினால் திருத்துவது சமய முறை. எனவே எல்லா உயிர்களையும் வையத்தில் சிறப்புற வாழவைப்பது சமயம் என்பது தெளிவாகிறது. இச்சமயம் ஒன்றாய் அரும்பிப்பலவாய்க்கிளைத்துள்ளது. இவ்வரியசமயங்கள் பலவற்றை ஈன்றெடுத்த பெருமை நமது பாரத நாட்டிற்கே உரியது. ஒவ்வொரு சமயமும் சிலவும் பலவுமான உண்மைகளை அறிவிப்பனவே. எனினும் இச்சமயங்கள் கூறிய உண்மைகளோடு இவை கூறாத பல உண்மைகளையும்கூறி முழுமுதலாக விளங்குவது சைவ சித்தாந்தம் ஆகும். சிவப்பரம்பொருளின் முழு முதல் தன்மையைக் குறித்து நன்கு விளக்குவதே சைவ சித்தாந்தம்.

மற்றெல்லாச் சமயங்களையும் தன்னுள் ஏணிப்படிகள்போல அடக்கியுள்ளதும், மிகத்தூய்மை, அறிவு, அருள் முதலியவற்றை அங்கங்களாகக் கொண்டதும் பேரின்பத்தைத் தருவதுமான சமயமே சைவ சமயம். இதிலும் பல பிரிவுகள் உள்ளன. ஐக்கியவாத சைவம், பேதவாத சைவம், சிவசமவாத சைவம் முதலிய பல. சித்தாந்தம் என்பது சித்தம் – அந்தம் எனப் பிரிக்கப்படும். அந்தம் – முடிவு; சித்தம் – சிந்திப்பது. சித்தாந்தமானது முடிந்த முடிவாகும்.

காலஞ்சென்ற ஜான்ஸ்டன் போன்ற விஞ்ஞானிகளும்' ஜி. யு. போப் போன்ற கிறிஸ்தவ பாதிரியார்களும் ஜான்மார்ஷல் போன்ற மேலை நாட்டு சுதந்திரப் பேராசிரியர்களும் சைவ சித்தாந்தத்தின் உயரிய தத்துவக் கொள்கைகளை மிகப்பெரிதும் பாராட்டியுள்ளார்கள் என்றால் சைவ மதத்தின் மேன்மையை உணர்ந்து கொள்ளலாம்.

'சைவசித்தாந்தம் என்னும் தத்துவக் கொள்கையானது மிக விரிந்தும், பெருஞ்செல்வாக்குடையதும், ஐயத்திற்கு இடமின்றி உண்மையிலேயேபெருமதிப்பிற்குரியதும், இந்திய நாட்டிலுள்ள சமயக் கொள்கைகளுக்கெல்லாம் தலை சிறந்ததுமாகும். தென் இந்திய மக்களின் மிகச் சிறந்த பேரறிவின் பெரு விளைவே சைவசித்தாந்தமாகும். இறை – உயிர் – மக்கள்தன்மை – உலகு இயற்கை – அறியாமை – துன்பம் – காணப்படாத மறுமை நிலைகள் என்பனவற்றைக் குறித்த சிக்கலான பொருள்களைத்

தெரிந்துகொள்ளும் இத்தகைய சிறந்த முயற்சி பற்றி இது வரையிலும் ஆங்கிலத்தில் முற்றிலும் எடுத்து விளக்கப்பட வில்லை! என்று சைவசித்தாந்தத்தின் சிறப்பினை எடுத்துக் கூறுகிறார் டாக்டர் ஜி. யு. போப் என்பவர்.

மேலும் இதன் சிறப்பினை கௌடி என்பவர் "பிற எல்லா ஆராய்ச்சி வகைகளையும் கொள்கை அல்லது வழிபாட்டு முறைகளையும் விட மேலானதாகச் சைவசித்தாந்தம் சில சிறப்பியற் பண்புகளைத் தன்னகத்தே கொண்டு ஒளிர்கின்றது. மிகவும் பழமை வாய்ந்ததாய் அப்பழமையினாலாகிய பெருமைகளைப் பெற்று விளங்குகிறது" என்று மேம்படக் கூறுகிறார்.

சைவசித்தாந்தம் தமிழ் நாட்டின்கண் தொன்று தொட்டு விளங்கிவரும் நன்னெறி ஆகும். திருவருளின் உதவியால் நம் தண்டமிழ்ச் சான்றோர் தாம் செய்த ஆராய்ச்சி, அனுபவங்கள் ஆகியவற்றின் பயனால் உலகம் உய்யும் பொருட்டு எடுத்துக் காட்டிய நன்னெறியே இது.

சைவ சமயம் தோற்றம் அறியப்படாத தொன்மையை உடையது. நெடுங்காலமாக மக்கள் வாழ்க்கையில் பின்னிப் பிணைந்து காணப்படுகிறது. மிகப்பழமையாக விளங்கும் இருக்கு வேதம் சிவமுழுமுதலை 'ஏகன்' என்ற சொல்லாலும் குறிப்பிடுகின்றன. 'ஏகன்' அல்லது ஒருவன் என்ற சொல் சிவபெருமானைத்தான் குறிக்கும் என்பதைத் தமிழ் மறை எழுதிச் சென்ற திருநாவுக்கரசர், 'ஒருவனாய் உலகத்தே நின்ற நாளோ' என்று குறிப்பிடுவதாலும் வைணவப்பெரியாராகிய நம்மாழ்வார் கண்ணபிரானைப் போற்றிடும் திருப் பாடலில் 'ஒருவன் என்றேத்தி நின்ற நளிர்மதிச்சடையான் என்கோ' என்று குறிப்பிடுவதாலும் நன்கு தெளிவாகிறது. இவை சிவநெறியின் பழமையையும், பெருமையையும் நன்குணர்த்துகின்றன. சங்க கால இலக்கியங்களாலும் பிற மத இலக்கியங்களாலும் சிவ நெறியின்பழமையையும் பெருமையையும் உணரலாம்.

சைவ சமயத்திற்கு எந்நாடும் நாடே; எம்மொழியும் மொழியே; வேற்றுமை என்பது இல்லை. இது உலகெங்கிலும் பரவியிருப்பினும் பழங்காலம் முதல் இன்றுவரையிலும் மாறாது பழைய பெருமையுடன் நிலைபெற்று விளங்குவது தமிழகத்தில் தான். பழங்காலத்தில் கடவுட்கொள்கை உடைய மதங்களில் சிவபெருமானைப் பரம்பொருளாகக் கொண்ட சைவம், திருமாலைப் பரம் பொருளாகக் கொண்ட வைணவம் ஆகிய இரு சமயங்களே சிறந்து விளங்கின. அதற்குக் காரணம் இவ்விரு மதங்களும் தெய்வங்கள் பலவும் எல்லாவற்றிற்கும்

மேலான பரம்பொருள் ஒன்றின் வழி நடப்பனவே எனும் அடிப் படையில் நின்று கிரியைகளை வகுக்கின்ற ஆகமங்களையும், அவ்வாகமப் பொருளை வலியுறுத்துகின்ற புராணங்களையும் தூயவகையில் செய்யப்படும் வழிபாடு முதலியவற்றைப் பெற்றிருந்தமையினுல் ஆகும் என்பதே. சைவ மதமானது பிற மதங்களைப்போல் அல்லாமல் தனிப்பட்ட தத்துவக் கொள்கை களையும் கொண்டு நின்றது. நிற்கிறது.

சைவம் சிவசம்பந்தமுடையது; சிவம் என்ருல் மங்களம். ஆகையால் சைவம் மங்களமுடையது. சிவ சம்பந்தம் சைவம். சிவம் என்பது நன்மை என்னும் பொருளுடையது. பேரின்பத் துக்குக் காரணம்; முற்றுணர்வினன்; தூய தன்மையன் என்னும் பொருள்உடையது. சிவம்என்னும்சொல். தூய்மை, முற்றுணர்வு பேரின்பம் முன்றையும் விரும்பும் உயிர்யாதாயினும் அது சிவத் தைச்சார்ந்ததே. அதற்குச் சிவம் உரியது. மக்களுள் அம் மூன் றையும் விரும்புவோர் யாவரேனும் அவர் சைவர் எனப்படுவர்.

சைவசித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கையானது பதி (கடவுள்), பசு (உயிர்), பாசம் (தளை)என்னும் மூன்று பொருள் களும் ஒன்ருல் ஒன்று தோற்றுவிக்கப்படாமல் என்றும் உள்ள உண்மைப் பொருள்கள் என்பதே. மற்ற மதங்களில் நின்று மாறுபட்ட சைவசித்தாந்தம் இவை மூன்றும் தனித்தனியான பொருள்களே; இவைகளுக்கு எந்நாளிலும் தோற்றமும் இல்லை முடிவும் இல்லை என்கிறது. தோற்ற நாசங்கள் அற்ற பொருள் ஆதலால் அநாதி அதாவது ஆதி இல்லாதது எனப்படும். ஆதி இல்லை எனவே அந்தமும் இல்லைஎன்பதாகும். பதியாகியகடவுள் என்று உண்டோ அன்றே பசுவாகியஉயிரும் உண்டு என்பதே சைவ சித்தாந்தத்தின் கொள்கை. இம்மூன்று பொருள்களில் உயிர் தன்னை இயல்பாகக் கட்டிப்பிணைத்துள்ள பாசத்திலிருந்து கடவுள்திருவருளைத்துணையாகக்கொண்டுவிடுபட்டுக்கடவுளின் திருவடியில் பேரின்ப வாழ்வில் திளைத்துவிடும் என்பதாகும்.

கடவுள் எட்டு குணங்களோடு கூடியவர். அவை மாயா குணங்களல்ல அருள் குணங்களே. இந்த எட்டு குணங்களை யுடைய கடவுளே உலகத்து நாயகளுக இருக்கிருர்.

அருவம், உருவம், அருஉருவம் என்றமுன்றுவழிபாடுண்டு. அருஉருவ வழிபாடு தான் சிவலிங்கபூசை.

கடவுள் நிமித்த காரணர். முதற்காரணம் மாயை. துணைக் காரணம் சக்தி. நிமித்த காரணம் சிவன். இவற்றிற்கு மண் தண்ட சக்கரம்-குலாலன் ஆகியவற்றை உதாரணமாகக் கொள்ளலாம்.

உயிர் அல்லது ஆன்மா கடவுளைப் போலவே ஆதியந்தம் இல்லாத பொருள். கடவுள் உயிர்களை உண்டாக்குவதில்லை. ஆன்மாக்கள் எண்ணில்லாதன. உடம்புகளையும் மற்றவைகளை யும் இறைவன் உண்டாக்குகிறன். உயிர் தாமே அறியும் தகுதி இல்லாதனவாய், சிற்றறிவு உடையனவாய், இயல்பாகவே பாசத்தால் கட்டுண்டவனவாய், சூரிய ஒளிகொண்டு பொருள் களைக்காணும் கண்களைப் போல இறைஒளிஉணர்த்த உணரும் இயல்புடையனவாய், இறைவனைச் சார்ந்து அறிவையும், பேரின்பத்தையும் பெறத்தக்கனவாய், பாசத்தைச் சார்ந்து அறியாமையையும் பெருந்துன்பத்தையும் அடையும் இயல்பின வாய் இருப்பன ஆகும்.

செம்பில் களிம்பு இருப்பதுபோல் இயல்பாகவே உயிரில் ஒரு குற்றம் இருக்கிறது. அது தடைப்பொருள். உயிர் கடவுளை அடையவொட்டாமல் தடுத்துநிற்பது அது. ஆணவம், கன்மம், மாயை என மூன்று மலங்களில் ஆணவம் மூல மலம். உயிர் களின் அறிவினை விளங்க வொட்டாமல் அதற்குத்தடையாக இருக்கிறது. யான் எனது எனும் அகப்பற்றுப் புறப்பற்றுகளை உண்டாக்கும்.

ஆணவத்தால் யான், எனது என்னும் பற்றுகள் விளை கின்றன. மாயையால் உலக இன்பத்தைப் பெரிதாக மதிக் கிறோம். கன்மத்தால் நல்வினை தீவினைகள் நிகழும். பாசக்கட்டு நீங்கவேண்டுமென்ருல் உயிரைப் பற்றிய இந்த மூன்று குற்றமும் நீங்க வகை தேட வேண்டும். பற்று நீங்குவதற்கு மனம்முதலிய கருவிகள் இறைவனை பற்றுக்கோடாகக்கொள்ள வேண்டும். உலகப்பற்றில் நீங்க ஆன்மா உபாயம் தேட வேண்டும். அந்த உபாயங்களே சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. இந்த சாதனங்களை அடைவதற்கு முன்பு சமயப்பிரவேசம்என்றஒருசடங்கைச்செய்துகொள்ளவேண்டும் சரியைத் தொண்டென்பது ஒரு எஜமானனுக்கு வேலைக்காரன் என்னென்ன உபசாரம் செய்வானே அவ்விதம் செய்தல். இறைவனை நினைந்து தொண்டுசெய்தால் வேறுபற்றுகள் நிகழா. கிரியைத்தொண்டென்பதுஒருவடிவத்திலேஇறைவனைவைத்துப் பூசித்தல். யோகம் என்பது பிராணயாமம் முதலிய யோக அங்கங்களால் ஒளிவடிவமாக இறைவனைக் கண்டு பூசித்தல். இஃது அக வழிபாடு. ஞானம் என்பது ஞானநூல் ஓதல் முதலிய செயல்களால் நன்கு பயின்று எங்கும் இறைவனைக் கண்டு பூசித்தல். இது சன்மார்க்கம். இந்த நான்கு செயல்களும் இன்றியமையாதனவே.

சங்க காலத்தில் சமண சமயமும், பௌத்த சமயமும், கிறிஸ்துவசமயமும் சிறிதுஆங்காங்கு கால்கொண்டு நின்றனவே யன்றி, தமிழ் நாட்டில் சைவமதத்தினை வீழ்த்தும் அளவிற்கு மேலோங்கிச் சிறக்கவில்லை. சங்க காலத்திற்குப் பிறகு சில மன்னர்கள் சமணமதத்தினைப் பின்பறியதன் காரணமாகத்தமிழ் நாட்டில் மேலோங்கி நின்ற சைவமதத்தினை மங்கிடச் செய்தது. என்றாலும் மாணிக்கவாசகர் திருவாசகமும், திருமூலர் திருமந்திர மும் இக்காலத்தில் தோன்றிச் சைவத்தினை வீழ்ச்சியில் நின்று காத்தன.

திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும் தோன்றிப் போர் இன்றிப் புரட்சியின்றி யாவரும் வியக்கும் வகையில் தாங்கள் இறைவனது உண்மைத் திருவருள் வலி ஒன்றினாலேயே செய்த சில அற்புதங்களாலும், அருட்செம்பாடல்களாலுமே அரசர் களுக்கு உண்மையை உணர்த்தி அவர்களைச்சைவர்களாகச் செய்து, நாட்டையும் சைவமாக்கினார்கள்.

சைவசித்தாந்தத்தின் பேரருள் ஆசிரியராகிய மெய்கண்ட தேவர், அவர்கள் தாம் பெற்ற பேரருளால் 'சிவஞானபோதம்' என்னும் சீரிய தத்துவ நூலினை அருளிச் செய்து அதனது உயர்ந்த பொருளினை எங்கும் பரவச் செய்தனர். இவர்தான் சைவசித்தாந்த முதலாசிரியர் எனக் கருதுகின்ற போதிலும் சிவபெருமான்தான் முதலாசிரியர் என்பர் ஆன்றோர். உண்மை ஞானத்தினைச் சிவபெருமான் உபதேசித்த போதிலும் தெய்வீக அருளால் அவ்வுபதேசம் மெய்கண்டதேவருக்குக்கிடைத்திடப் பெற்று அதன் விளைவாக அவர் உருவாக்கியதே சிவஞான போதம். இவருக்கு முன்னால் சித்தாந்த நூல்கள் இருப்பினும் சித்தாந்த பொருள்களை அடைவுபட சிறந்த முறையில் வகுத்து விளக்குவது இவர்தம் சிவஞானபோதமேயாகும். இவர் சித்தாந்தத்தை பிரமாணம், இலக்கணம், சாதனம், பயன் என நான்கு வகையாகப் பிரித்து விளக்கினார்.

தலைசிறந்த சைதசித்தாந்த தத்துவச் சிறப்பினைப் பிறசமயங் களுடன் ஒப்பிட்டு நோக்கி ஆய்வு செய்து உலகெங்கும் பரவச் செய்திடவேண்டும்என்ற உயரிய நோக்குடன், தருமையாதீனம் 'சைவசித்தாந்த மேல்நிலை ஆய்வு மையம்' ஒன்றைத் தொடங்க விருப்பது மிக மிகப் பாராட்டுதலுக்குரிய ஓர் உன்னதசெயல் ஆகும். தருமை ஆதீனம் மேலும் பல சைவசித்தாந்த வளர்ச்சிப் பணியினைத்திறம்படசெய்திடும்என்பதில் எள்ளளவும்சந்தேகம் இல்லை. அனைத்துலகச் சைவசித்தாந்த கருத்தரங்கம் இனிது நடைபெற இறையருளை வேண்டுகிறேன்.

---

தருமை ஆதீனத்தில்
அனைத்துலக சைவசித்தாந்த முதற்கருத்தரங்கம்



தமிழக அரசு அறநிலையத்துறை அமைச்சர்
மாண்புமிகு. இராம. வீரப்பன் அவர்களும்
அறநிலைய ஆணையர் திரு. கு ஆளுடையபிள்ளை அவர்களும்
ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தைத் தரிசித்தபோது
பொன்னுடை போர்த்தி ஆசீர்வதித்தல்

தருமை ஆதீனத்தில்
அனைத்துலக சைவசித்தாந்த முதற்கருத்தரங்கம்



மாண்புமிகு. அறநிலைய அமைச்சர்
இராம. வீரப்பன் அவர்கள்
உரையாற்றுதல்

கருமை ஆதீனத்தில்
அனைத்துலக சைவசித்தாந்த முதற்கருத்தரங்கம்



உலக சைவசித்தாந்த ஆய்வு மையத்தை
தமிழக அரசு சட்டமன்றத் தலைவர்
மாண்புமிகு. இராஜாராம் அவர்கள்
சித்தாந்த சாத்திர ஏட்டுச் சுவடிகளை
பாரதிதாசன் பல்கலைக் கழகத் துணைவேந்தர்
திரு. P. S மணிசுந்தரம் அவர்களிடம்
வழங்குவதன்மூலமாகத் தொடங்கிவைத்தல்

கட்டுரை எண். 50

# அபிராமி அந்தாதி

டாக்டர் புலவர் திரு. K. சந்தானராமன், M. A., B. Lit.,
D. P. P. A., D. U. N., I. U.
பருத்தியூர்.

**சுரம்பை அடுத்துக் குடிபுக்க ஆவிவெங் கூற்றுக்கிட்ட
வரம்பை அடுத்து மறுகும் அப்போது வளைக்கையமைத்து
அரம்பை அடுத்த அரிவையர் சூழவந்து அஞ்சலென்பாய்
நரம்பை அடுத்த இசைவடிவாய் நின்ற நாயகியே!**

**அ. நரம்பை அடுத்த இசைவடிவாய் நின்ற நாயகியே!**

(1) நரம்பையொட்டி இயங்கும் இசையின் வடிவாகத் திகழும் தலைவி என்பது பொதுவான பொருள்.

(2) யாழ், வீணை, பிடில் முதலான நரம்புக் கருவிகளின் சுருதியோடு இணைந்து இசை எழும்புவதால் 'நரம்பை அடுத்த இசை' என்றார்.

(3) இசைக்கும் நமது நரம்புமண்டலத்துக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. தாலாட்டுப்பாடல் குழந்தையின் நரம்பு மண்டலத்தில் விளைவினை ஏற்படுத்தித் தூங்கச்செய்கின்றது. 'நீலாம்பரி' பெரியவர்களையும் உறங்கச்செய்கிறது. 'பூபாளம்' விழித்தெழச்செய்கிறது. 'புன்னாகவராளி' பாம்பின் நரம்பு மண்டலத்தில் செயல்பட்டு அதனை ஆடச்செய்கிறது. இவ்வாறு நரம்புமண்டலத்தில் விளைவு ஏற்படுத்துவதால் நரம்பை அடுத்த இசையாயிற்று.

(4) அங்ஙனமே இசைபாடுவோரின் நரம்பு மண்டலமும் இசைக்கும்பொழுது செயல்படுகின்றது. ஒலி எழும்பிவரும் வழியில் எங்கேனும் சிறுநரம்பொன்று பாதிக்கப்படின் இசையில் 'அபஸ்வரம்' தட்டுகிறது.

(5) இசையின் விளைவாக ஏற்படும் மாறுதல்களை நவீன ஆராய்ச்சியாளர்கள் விரிவாக எடுத்துரைக்கின்றனர். பயிர் அதிகப்பயன்தரும் என்றும், பசு அதிகப்பால்தரும் என்றும் இசையின் விளைவுகள் குறித்து அவர்கள் நிறுவியுள்ளனர். அதேகருத்தினை நம்முன்னோர் அனுபவத்தால் கண்டு நரம்பை அடுத்த இசையென்று போற்றினர்.

(6) இங்கு அம்பிகையினை இசையின் வடிவானவள் என்கிறார். சான்றோர் இறைவனை 'நாதப்ரம்மம்' என்பர். நாதப் பிரம்மத்தை-இசைவடிவான கடவுளை இசையின்மூலம்வழிபடும் வழிபாட்டை 'நாத உபாஸனை" என்று போற்றுகின்றனர். சிறந்த இசைவாணர்களை 'நாதயோகிகள்' என்கின்றனர். திருநீலகண்ட யாழ்ப்பாணர், ஆனயர் ஆகிய இரு சைவநாயன் மார்களும் நாதோபாஸகர்களே. சங்கீத மும்மூர்த்திகளில் முத்துசுவாமி தீட்சிதர், சியாமா சாஸ்திரிகள் ஆகிய இருவரும் தீவிரமான தேவி உபாஸகர்கள். 'நாதாதிகுருகுஹ' என்று தீட்சதரின் முதல் கிருதியே துவங்குகிறது.

(7) 'ஏழிசையாய் இசைப் பயனாய் இருப்பவன் இறைவன்' என்று தேவாரமும் "இன்னிசை வீணையின் இசைந்தோன் காண்க. அன்னது ஒன்று அவ்வயின் அறிந்தோன் காண்க" எனத் திருவாசகமும் இறைவன் இசைவடிவாய் இருப்பதைக் குறிப்பிடுகிறது.

(8) 'நாதரூபா' என்றும் 'நாதரூபிணி' என்றும் இரண்டு இடங்களில் சகஸ்ரநாமம் அம்பிகையினைக் குறிப்பிடுகின்றது. 'பரா' முதலிய ஒலியின் இயல்புகளைக் குறிப்பது முன்னால் வரும் நாமா பின்னால் வருவது 'நாதப்ரமம்' என்னும் இசைவடிவாய் நிற்கும் நிலையினைக் குறிக்கிறது.

(9) தீவிர இராமபக்தரான தியாகராஜ சுவாமிகளும் தனது இசைப்பாடல்களில் சிவபெருமானது 'நாதப்ரம்ம' நிலையினைப் போற்றிப் புகழுகிறார். "நாததநுமனிசம் சங்கரம் நமாமிமே மநஸா சிரஸா — நாதத்தையே சரீரமாகவுடைய சங்கரனை மனதாலும் சிரத்தாலும் வணங்குகிறேன்" என்கிறார்.

'சங்கீத ஞானமு பக்திவிநா' என்ற பாட்டில் "இசை ஞானமும் பக்தியும் அன்றி உலகில் வேறு நல்வழி உண்டா?" என வினவுகிறார். 'விதுலகு' என்ற பாடலில் இசைவடிவில் இறைவனை உபாஸிக்கும் பெரியோர்களுக்கு வணக்கம் தெரிவிக்கிறார்.

'மோட்சமு கலதா' என்ற பாட்டில் "பிரணவநாதம் ஸப்தஸ்வரங்களாகப் பெருக வீணைவாசிப்பதன் மூலம் இசை வடிவ உபாஸனை புரியும் சிவபெருமானின் மனப்போக்கை அறியாதவர்களுக்கு மோட்சமும் உண்டா எனக்கேட்கிறார். இதிலிருந்து, இசைவடிவான வழிபாடுசிவபெருமான் வழங்கியது எனத்தெரிகிறது.

"சோபில்லு ஸப்தஸ்வர" என்ற பாடலில் நாபி, கழுத்து, இதயம், நாசி ஆகியவற்றில் பிரகாசிக்கும் ஏழு ஸ்வரங்களென்னும் அழகிய மூர்த்தங்களைத் துதிசெய் மனமே! என அறிவுறுத்துகிறார். இங்குநாபியிலிருந்து எழும்இசையும் ஒருவித குண்டலினி யோகமே என்பது புலனாகிறது.

(10) திருமுறைகளும், நாயன்மார்களும், சங்கீத மூர்த்திகளும் போற்றியபடி அதே 'நாதப்ரம்மமாய்' இருக்கும் அம்பிகையினை அபிராமிபட்டரும் இசைவடிவாய் நின்ற நாயகி என்கிறார். சிவத்தினின்றுசக்தியின்தோற்றம் ஏற்படும்பொழுதுஉண்டாகும் ஸ்பந்தம் அல்லது அசைவே நாதம். அதுவே இசை. அதுவே சக்தியம்சம். இவ்வாறு உரையாசிரியர் திரு. சண்முகநாதன் விளக்குகிறார்.

## ஆ. குரம்பை அடுத்துக் குடிபுக்க ஆவி

(1) இவ்வுடலாகிய குடிலைச் சார்ந்து குடிபுகுந்து இருக்கும் உயிர் என்கிறார்.

(2) முன் பாடலின் விளக்கத்தில் இவ்வுடம்பு எங்ஙனம் 'குரம்பை' ஆகிறது என்பதனை விரிவாகக் கண்டோம். அக்குரம்பையும் இவ்வுயிருக்கு உரியது அன்று. சொந்தமான குடில் என்று கூறமுடியாது. வாடகை வீட்டில் குடியிருப்பது போல் உரிமையின்றி எப்போது காலிசெய்ய வேண்டிவரும் என்ற நிலையிலேயே இருக்கிறது. எனவே 'குடிபுக்க' ஆவி என்றார்.

## இ. வெங்கூற்றுக் கிட்ட வரம்பை அடுத்து மறுகும் அப்போது

(1) உயிர்களுக்கிட்ட கால எல்லை முடியும் பொழுது கொடிய கூற்றுவன் வந்து உயிரினைக்கவருகிறான். அப்பொழுது இன்னலுறும் பொழுதாகும்.

(2) 'மறுகுதல்' என்ற சொல்லுக்குச்சுழலுதல், வருந்துதல், அரைபடுதல், கொண்டுபோதல் ஆகிய பொருள்கள் உண்டு. எனவே, கூற்றுவன் கால எல்லையினை அடுத்து உயிரினைக்

கொண்டு செல்லும் பொழுது எனவும், ஆவி வருந்தி, அல்லற்பட்டு, அரைபட்டுச் சுழலும் பொழுது எனவும் விரியும்.

(3) நீதியின் எல்லைக்குக் கட்டுப்பட்டும், உயிர்களின் கால எல்லைக்குக்கட்டுப்பட்டுமே அவன் கவருகிறான். ஆகவே 'வரம்பை அடுத்து' வருபவன் என்றார்.

(4) இப்போது நீ இங்கு இவ்வுயிர்பால் வரலாம் என வரம்பு ஒன்று உண்டு. அது கூற்றுவனுக்கு இறைவன் இட்ட வரம்பு அல்லது எல்லை. "உன் வாழ்வு முடிந்துவிட்டது இனி உன் உயிர் கூற்றுவன் உடையது" என்று அவனிடம் உயிர்களை விட்ட நிலை கூற்றுக்கிட்ட வரம்பாகும். அதாவது கூற்றுவன் முன்னே உயிர்களை இட்டுவிட்ட நிலை.

### ஈ. அப்போது அரம்பை அடுத்த அரிவையர் சூழவந்து, வளைக்கையமைத்து அஞ்சலென்பாய்

(1) அக்காலன் வரும் சமயத்தில் நீ அரம்பை முதலான பெண்கள் புடைசூழ எழுந்தருளி உனது வளையணிந்த திருக்கரத்தால் 'அபயம்' காட்டி என்னை 'அஞ்சற்க' எனக்கூறுதல் வேண்டும்.

(2) நான் உன்னைக் காப்பாற்றுவேன் என உணர்த்த அபயக்கரம் காட்டுதலை வளைக்கை அமைத்தல் என்றார். "நீதி அமைப்பில்' என்ற உண்மை விளக்கம் இங்கு ஒப்புமை.

(3) அப்போது உற்றார் உறவினர்கள் மரணத்தை எண்ணி அழுதும், அலலக்குரல் எழுப்பியும் அவ்விடத்தில் ஒரு துன்பச்சூழலை ஏற்படுத்திவிடுவர். அதனை மாற்ற அரம்பை முதலான பெண்களுடன் வரவேண்டும். ஏனெனில் அவர்களது ஆடை அணிகலன்களின் இனிய ஒலி எங்கும் நிறைந்திருப்பது எனது காதில் விழும். அத்துடன் அன்னையாகிய நினது கை வளையலின் நாதமும் எழும்பி அங்குள்ள துன்பச்சூழ்நிலையினை மாற்றிவிடும். எனவே அரம்பை அடுத்த அரிவையருடன் வந்து வளைக்கையும் அமைக்கவேண்டும் என்கிறார்.

(4) 'ரம்பாதி வந்திதா' என்பது சகஸ்ரநாமம். அதாவது அரம்பை முதலியவர்களால் வணங்கப் படுபவள் என்பது பொருள். சாக்த நூல்களில் குறிப்பிடப்படும் அரம்பை, அலம்புசை, மனோகரை, சந்திரகலை முதலான அறுபதாயிரம் தெய்விகப் பெண்களையே இங்குக் குறிப்பிடுகிறார். அவர்கள் அன்னையின் 'பரிவாரங்கள்' ஆவார்கள். நடனமிடும் அரம்பை, ஊர்வசி போன்ற பெண்களை இங்குக் குறிப்பிடவில்லை.

(5) அன்னையின் பரிவாரங்களாகிய அவர்கள் என்றும் முதுமை எய்துவதில்லை. இருபதுக்கும் இருபத்தைந்துக்கும் இடைப்பட்ட 'யௌவன' நிலையிலேயே எப்போதும் இருப்பவர்கள். ஆகவே அப்பருவப் பெண்களைக் குறிக்கும் 'அரிவையர்' என்ற சொல்லினையே எடுத்தாள்கிறார்.

(6) இறுதிக் காலத்தில் எதனைக் கண்டும் கருதியும் உயிர் விடுகிறார்களோ அதாகவே ஆகிவிடுவர் என எண்ணுவது மரபு. அதன்படி இறுதிக் காலத்தில் உனது பரிவாரங்களையும் பிறவற்றையுமே எண்ணினால் அவைகளாக ஆகி உன்னுடனேயே இருக்கலாமல்லவா?

(7) குரம்பையினை விடுத்து உயிர் ஏகும் பொழுது காக்கும் படிவேண்டும் மதுராபுரி அம்பிகை மாலையிலுள்ள பாடல் வருமாறு :-

நெளிக்கும் புழுவுக்கிடமாம் குரம்பையின் நின்றுமுயிர்
ஒளிக்கும் பொழுது வெளிப்படுவாய்! ஒழியாப் பிறவிச்
சுளிக்கும் கடலில் சுழலாமல் வாழ்வைத் துறந்து படைத்து
அளிக்கும் பராசக்தியே! மதுராபுரி அம்பிகையே!

இசையில் தேர்ச்சி பெறுதலும், 'நாத யோகம்' கிட்டுதலும் இப்பாடலின் பாராயண பலன் ஆகும்.

---

**கடிதம்:**

**ஆ. சண்முகநயினார்,** பி. காம் எச் டி. சி., சென்னை-17
2 (ஐ) சிவாஜி தெரு, தியாகராயநகர், 12—6—84

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் பொன்னார் திருவடிகளுக்கு எளியேன் வணக்கம்.

"ஞானசம்பந்தம்" மே 1984 இதழில் சைவ சித்தாந்தக் கருத்தரங்கில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அருளிய கருத்தாழம் மிக்க உரையைப் படித்து மகிழ்ந்தேன். ஆடம்பரமான குறியீட்டுச்சொற்களைத்தவிர்த்துஎளியமுறையில்தர்க்கரீதியாக சந்நிதானம் அருளியுள்ள உரை யாவர்க்கும் பயன் தருவதாகும். கருத்தரங்கில் படிக்கப்பட்ட கட்டுரைகள் (ஆங்கிலக் கட்டுரைகள் உட்பட) தொடர்ந்து "ஞானசம்பந்தத்தில்" வெளிவருமாயின் கருத்தரங்கில் கலந்துகொள்ளும் வாய்ப்பினை இழந்த என்போன்றோருக்குப் பெரிதும் பயன்படும்.

# திருவருட்பாத் திரட்டு

( பொழிப்புரையுடன் )

வித்துவான் திருமதி. ப. நீலா எம். ஏ.,

( மலர் 43, இதழ் 7, பக்கம் 332 இன் தொடர்ச்சி. )

மையமருங் கண்டனே மாணிக்க மாமலையே
துய்யவெண்ணீ றங்கமெங்குந் துன்னுமொரு சோதியனே
ஐயனேநோ யிலடிபட் டேனையஞ் சலென்பாய்
மெய்யனே காசி விருத்தகா ளேச்சரனே. 6

( பொ – ரை ) நீலமிடறுடையோய்! மாணிக்கமலையான வனே ! தூயதிருநீறு பொருந்திய சோதிநிறை மேனியனே ! தலைவனே ! நோயில் சிக்கிய என்னை அஞ்சலென அருள்வாய்.

( கு - ரை ) மையமருங்கண்டம் – திருநீல கண்டம் 'நீல மணிமிடற்றொருவன்' – ( புறநா – 91. ) முதலடியில் முரண் தொடை அமைந்தது. வெண்ணீறு துன்னும் – " பவளம்போல் மேனியில் பால்வெண்ணீறு " என்று ( 4 – 81 – 4 ) அப்பரும் கூறினர். நோயினால் வருந்தலை ' நோயுற்றடராமல் நொந்து மனம் வாடாமல் – (திருப்போரூர் சந்நிதி - 9.) என்று அருளினர் சிதம்பர சுவாமிகள். நோய்– பிறவி நோயே." நோயால் வருந்தி யுனை நூறுகுரல் கூப்பிட்டால் நீயாரென திருக்கை நீதியோ " என்று கேட்டார் ஸ்ரீ குருஞானசம்பந்தர்.

அங்காளம் போலாம் அருநோயில் வீழ்வேனை
கங்காள அப்பிணியைக் கட்டறுத்தே யென்னையும்நீ
இங்காண்டு கொண்டே யிடரகற்றி இன்பளிப்பாய்
வெங்காள காசி விருத்தகா ளேச்சரனே. 7

( பொ – ரை ) முழு எலும்புக்கூட்டைச் சுமந்தவனே ! கொடிய விஷம்போன்ற நோய்களில் விழுந்து வருந்துமென்னை அப்பிணிகளை யொழித்து இடரகற்றி – இவ்வுலகிலேயே உன்நண்பனாக ஆட்கொண்டு இன்பத்தினை அளித்திடுக

( கு - ரை ) காளம் – கொடிய விடம். (ஆலகாலம் – கால என்ற வடமொழி காள என வரும்.) 'ல' கர 'ள' கரப் போலி

எனலும் ஆம்!" அலைகடலில் ஆலாலம் அமுதுசெய்தகரியதொரு கண்டத்து............காட்சியானை '' (6 84 9.) ' முருகு காள விட மயின்ற இருகண் வேலி ' (திருப்புகழ் - 219.) நோய் - இங்கே உடலைப்பற்றும் நலிவுகளே குறிக்கப்பெற்றன. கங்காளம் - முழு எலும்பு. ' நங்காய் இதென்னதவம் நரம்போடெலும் பணிந்து, கங்காளம் தோள்மேலே காதலித்தான் காணேடி ' (திருவா. சாழல் - 11,)

> பெருங்கடல் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும்போய்
> இருங்கடல் மூடி இறக்கும் இறந்தான் களேபரமும்
> கருங்கடல் வண்ணன் களேபரமுங் கொண்டு கங்காளராய்
> வருங்கடல் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே.
>
> — அப்பர். (பொது. 7.)

பள்ளத்தின் மேட்டி(ல்) நிறை பாணிவந்து கூடலிலென்
உள்ளமுன் பாதத்திலன்பா யோடியேயொன் றவைப்பாய்
கள்ளவிழுந் தும்பை கடுக்கை சடைக்கணிந்து
வெள்ளைவிடை யேறும் விருத்தகா ளேச்சுரனே. 8

( பொ-ரை ) தேன் துளிக்கும் தும்பை கடுக்கை இவற்றை சடையிலணிந்து வெண்மையான எருது வாகனத்தில் ஏறும் காளேசுரனே! மேட்டிடம் நின்ற தண்ணீர் பள்ளத்தை நோக்கி வந்துசேர்வது போல என்னுள்ளம் உன்பால் அன்பாக ஓடி வந்தொன்ற அருள்வாய்.

( கு-ரை ) பாணி - தண்ணீர். ' பள்ளந் தாழுறு புனலில் கீழ் மேலாகப் பதைத்துருகும் ' - ( திருவா - திருச்சதக. 21 ) எளிய சிறிய பூவான தும்பையிலும் தேனுண்டு என்றது கருதற் கினியது. கடுக்கை - கொன்றை. ' அங்கட் கடுக்கைக்கு முல்லைப் புறவ முறுவல் செய்யும் ' ( 4 - 86 - 10 ) என்று அப்பர் கொன்றையில் தேனுள்ள விபரம் கூறினர்.

பொய்யான மெய்ப்பிணிகள் போக்குவே னென்னுமுரை
கையான நெல்லிபோல் கண்டுன் கழலடைந்தேன்
ஐயாவென் னேயை அகற்ருயே லந்தவுரை
மெய்யாமோ காசி விருத்தகா ளேச்சுரனே. 9

( பொ - ரை ) பொய்யென்ற எனது மெய்யைச் சார்ந்த பிணிகளைப் போக்குவேன் என்ற உனது சொல்லை, கைக் கணுள்ள நெல்லிக்கனிபோல் தெளிவாக உணர்ந்து உன் கழல்

அடைந்தேன். ஐயனே! என்னேயை அகற்றுவிடில் அந்த உரை பொய்யாகிப் போகுமே!

(கு - ரை) உன்னுரை உண்மையாவதற்காக வேனும் எனது நோயை அகற்றிடுக நோய் - ஈண்டு பிறவி நோயும் உடல் நலிவும் ஆம். 'வலிதாயம் - சித்தம் வைத்த அடியாரவர் மேலடை யாமற்றிடர் நோயே' - (திருஞான - பதிகம் 1-3-1) 'கட்டமும் பிணியும் களைவானை " - (சுந்தரர் - 7-59 - 2)

காலாதீ தஞ்சேர் கருணைகண சீகரஞ்சேர்
பாலாழி யாகிப் பரவெளியா யொன்ருகு
நாலாம் பதத்திலெனை நாட்டியஞ்ச லஞ்சலென்பாய்
மேலாகும் காசி விருத்தகா ளேச்சுரனே. 10

(பொ - ரை) காலத்துள் அடங்காத நினது கருணைத் திவலைகளின் கூட்டம் பெரிய பாற்கடலாகிப் பரவெளியில் ஒன்றிட, அதனை அனுபவிக்க எனக்குச்சாயுச்சிய பதம் தந்து அஞ்சலென ஆண்டிடுக.

(கு - ரை) காலாதீதன் - காலத்திற்குள் அகப்படாதவன். நாலாம்பதம் - சாயுச்யம். சீகரக்கணமென மாற்றிக் கூட்டுக. கருணை - பாற்கடல் போல. 'பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப் பாற்கடல் ஈந்தபிரான்' சேந்தனர் (திருப்பல் - கோயில். 9) என்று அவனது பெருங்கருணைத் திறத்தினைக் கூறியவாறு காண்க. (தொடரும்)

---

**கடிதம்:**

N. R. Umamaheswaran
The Karur Vysya Bank Ltd.,
12/85-88, S. V. N Road,
WARANGAL 506 002 (A. P.)
16—6—84

...தேனும் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமானைப் போற்றிய சைவ சித்தாந்தக் கருத்தரங்க மாநாட்டு விஷயம் தாங்கி வந்தமையால் இதழும் தேனகவே இனிக்கின்றது. "திருநாளைப்போவாரின் சிந்தனை" முத்தாக இதயத்தில் பதிய, ஐயன் நந்தனரைத் தன்மலரடி சேர்த்துக்கொள்ளும் கட்டம், என் இருகண் விழிகளினின்று துளிகளை அருவியெனப்பொழிய வைத்துவிட்டமையால் ஞானசம்பந்தத்திற்கு நன்றி. வணக்கம்.

தருமையாதீனத்தில்

# அனைத்துலக சைவசித்தாந்த

# முதல் கருத்தரங்கப் பெருவிழா

**வித்துவான், திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ.,**

( மலர் 43 இதழ் 7 பக்கம் 320 இன் தொடர்ச்சி )

முதல்நாள் விழா: ( காலை )

11—5—84 வெள்ளிக்கிழமை காலை ஸ்ரீ ஞானபுரீசுவரர் சுவாமி திருக்கோயிலில் இடபக்கொடியேற்றத்துடன் விழா தொடங்கியது.

காலை 7-30 மணிக்கு அலங்கரிக்கப்பெற்ற ஆறு யானைகளில், வேதம், சிவாகமம், புராணம், இதிகாசம், திருமுறைகள், சித்தாந்த சாத்திரங்கள் ஆகிய அறுவகைச் சுவடிகளும் ஆறு யானைகள்மீது ஊர்வலமாக வேதாகம தேவார பாராயணங்களோடும் நாதசுர இன்னிசையோடும் நகர்வலமாக எழுந்தருளுவிக்கப்பெற்று விழாமேடையில் வெள்ளித்தேர் விமானத்தில் எழுந்தருள்விக்கப்பெற்றன.

திருமுறைப் பண்ணிசையரங்கு :

காலை 8-30 மணிக்கு சீகாழி திரு. சா. திருஞானசம்பந்தன், திருப்பனந்தாள் திரு. எஸ் முத்துக்கந்தசாமி குழுவினர் தேவாரத் திருப்பதிகங்களைப் பண்ணொன்றப் பாடி அனைவரையும் மகிழ்வித்தனர்.

கருத்தரங்க விழா :

காஞ்சிபுரம், குன்றக்குடி ஸ்ரீலஸ்ரீமகாசந்நிதானங்கள், திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் ஸ்ரீமத் காசிவாசிசுவாமிகள், தவத்திரு சுத்தானந்தபாரதியார், முன்னாள் துணை ஜனாதிபதிமேதகு.ஜாட்டி திரு நா. மகாலிங்கம், பெங்களூர் திரு. எம். வி. ஜெயராமன் துணைவேந்தர் திரு. மணிசுந்தரம் முதலியோருடன் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள், மேளவாத்தியங்கள் முழங்க விழா மேடைக்கு எழுந்தருளினார்கள்.

இறைவணக்கமாகத் திருமுறை ஓதப்பெற்றது. சிதம்பரம் சபாநாதர் திருக்கோயில் பொது தீட்சிதர்கள் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கட்குப் பொன்னாடை போர்த்தி மாலை அணிவித்து ஸ்ரீ நடராசப் பெருமான் அருட்பிரசாதத்தை வழங்கியது

விழாவின் வெற்றிக்கு ஸ்ரீ நடராசப்பெருமான் அருள்புரிந்ததை வெளிப்படுத்தும் திருவருள் நிகழ்ச்சியாய் அமைந்தது.

வரவேற்புரை :

ஆதீனச்சார்பில், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்ததிபர் கயிலைமாமுனிவர் ஸ்ரீமத்காசிவாசி முத்துக்குமாரசாமித்தம்பிரான் சுவாமிகள் தமிழில் வரவேற்புரை நிகழ்த்தினார்கள். பல்கலைக் கழகச் சார்பில் துணைவேந்தர் திரு. மணிசுந்தரம் அவர்கள் ஆங்கிலத்தில் வரவேற்புரை வழங்கினர்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள், விழாவின் சிறப்பு விருந்தினர்களான காஞ்சிபுரம், குன்றக்குடி மகாசந்நிதானங் கட்கும், திருப்பனந்தாள் ஸ்ரீமத் காசிவாசி சுவாமிகள், மேதகு ஜாட்டி, தவத்திரு. சுத்தானந்தபாரதியார், திரு. நா. மகாலிங்கம், டாக்டர். வ. ஆ. தேவசேனபதி, திரு. எம். வி. ஜெயராமன் துணை வேந்தர் திரு. மணிசுந்தரம், ஓ. வீ. அளகேசன் முதலியோர்க்குப் பொன்னாடைகள் அணிவித்துப் பாராட்டினார்கள்.

ஆசியுரை :

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் கருத்தரங்கின் நோக்கம் பற்றி விளக்கி வந்திருக்கும் அனைவருக்கும் அருளாசி வழங்கியருளினார்கள். குன்றக்குடி ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் விழாவிற்குத் தலைமை வகித்துக் கருத்தரங்கை மிகச் சிறந்த முறையில் நடத்தும் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தின் அருட்பணிகளைப்பாராட்டியருளினார்கள்.

தலைமையுரை :

கேரள மாநில ஆளுநர் மேதகு பா. இராமச்சந்திரன் அவர்கள் விழாவிற்கு வரஇயலாமையைத் தெரிவித்துத் தம் தலைமையுரையை விமானம் வழியே அனுப்பியிருந்தார்கள். அவர்தம் தலைமை உரை விழாவில் படிக்கப்பட்டது.

தொடக்கவுரை :

முன்னாள் இந்திய துணை ஜனாதிபதி மேதகு பி. டி. ஜாட்டி அவர்கள் கருத்தரங்கைத் தொடங்கி வைத்து ஆங்கிலத்தில் அழகியதொரு விரிவுரை நிகழ்த்திக் கருத்தரங்கக் கட்டுரைச் சுருக்க மலரை வெளியிட்டார்கள்.

முதற் பேருரை :

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகச் சார்பில் உள்ள காஞ்சி புரம் தத்துவ ஆய்வுமையத்தின் இயக்குநர் டாக்டர் திரு வ. ஆ. தேவசேனபதி அவர்கள் கருத்தரங்க முதற்பேருரை வழங்கினர்.

கவியோகி, மகரிஷி, தவத்திரு. சுத்தானந்த பாரதியார் அவர்கள் சிறப்புரையாற்றி மகிழ்வித்தார்கள்.

## மலர் வெளியீடு :

கருத்தரங்க விழாமலரைப் பொள்ளாச்சி தொழிலதிபர் திரு. நா. மகாலிங்கம் அவர்களும், ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் அருளுரைகளின் தொகுப்பு நூலாகிய திருவருட்செய்தி இரண்டாம் தொகுதியை பெங்களூர் திரு. எம். வி. ஜெயராமன் அவர்களும் வெளியிட்டனர்.

வித்துவான் ஸ்ரீமத். இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள் அனைவர்க்கும் நன்றியுரை நவின்றார்கள்.

## முதல்நாள் நிகழ்ச்சி: (பிற்பகல்)

11—5—84 வெள்ளி பிற்பகல் 2-30 மணிக்குக் கருத்தரங்க முதல் அமர்வு (தமிழ்) தொடங்கியது. காஞ்சிபுரம் மகா வித்துவான் திரு. சி. அருணைவடிவேல் முதலியார் தலைமையுரை நிகழ்த்தினார். மலேயா, டாக்டர் திரு. இரா. தண்டாயுதம் சைவ சித்தாந்தத்தில் உயிருண்மைபற்றியும், டாக்டர் திரு. சொ. சிங்காரவேலன் திருநாவுக்கரசர் தேவாரத்துள் தனி இயல்பு பற்றியும், சென்னை திரு. சி. என். சிங்காரவேல் சைவசித்தாந்தத்தில் விஞ்ஞானநோக்குப் பற்றியும் ஆய்வுரை வழங்கினர்.

பிற்பகல் 3-45 மணிக்கு இரண்டாவது அமர்வு (ஆங்கிலம்) தொடங்கியது. சென்னை டாக்டர் திரு. ஆர். பாலசுப்பிரமணியம் தலைமையுரை நிகழ்த்தினார். கனடா திருமதி. கொப்பேட்ரேயர் சைவசித்தாந்தத்திலும் கிறித்தவத்திலும் கன்மம் பற்றியும், இலங்கை திருமதி. இரத்தினமாநவரத்தினம் புதிய உலகிற்குச் சைவசித்தாந்தம் கூறும் உண்மைகள் பற்றியும், ஆய்வுரை நிகழ்த்தினர்.

## மகாமண்டபத் திறப்புவிழா :

மாலை 6 மணி அளவில் ஸ்ரீ மகாலக்ஷ்மி துர்க்காதேவி திருக்கோயில் மகாமண்டபத்திறப்புவிழா நிகழ்ந்தது. திருப்பனந்தாள் ஸ்ரீமத் காசிவாசி சுவாமிகள் அவர்கள் முன்னிலையில் தமிழ்நாடு அரசு அறநிலையத்துறை அமைச்சர்மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள் மகாமண்டபத்தைத் திறந்துவைத்தார். இந்து சமய அறநிலையத்துறை ஆணையர் திரு. கு. ஆளுடைய பிள்ளை அவர்கள் கலைக் காட்சியைத் திறந்துவைத்தார். ஸ்ரீ மகாலக்ஷ்மி துர்க்காதேவிக்கு விசேஷ அர்ச்சனை ஆராதனைகள் நிகழ்த்தப் பெற்றன. அனைவரும் தரிசித்து மகிழ்ந்தனர். பிறகு அமைச்சர் அவர்களும் ஆணையர் அவர்களும் திருமடத்திற்குச் சென்று

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களைத் தரிசித்தனர். ஸ்ரீலஸ்ரீ குரு மகாசந்நிதானம் அவர்கள் பொன்னாடைபோர்த்தி ஆசீர் வதித்தார்கள்.

## பொதுப்பேரவை :

மாலை 7 மணி அளவில் பொதுப்பேரவை தொடங்கியது. ஸ்ரீமத் காசிவாசி சுவாமிகள் வாழ்த்துரை வழங்கினார்கள். குன்றக்குடி ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் தலைமையுரை நிகழ்த்தினார்கள். அறநிலையத்துறை ஆணையர் அவர்களும், சென்னை திருமதி. சௌந்தராகைலாசம் அவர்களும், டாக்டர் ஔவை. து. நடராசன் அவர்களும் தமிழில் ஆய்வுரை நிகழ்த்தினார்கள். மதுரை திரு. பி. டி. ஆர். கமலத்தியாகராசன் அவர்கள் ஆங்கிலத்தில் ஆய்வுரை நிகழ்த்தினர். "சிவஞான போதச் சிற்றுரைவிளக்கம்" என்னும் நூலை வெளியிட்டு முத்தமிழ்க் காவலர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் உரையாற்றினர். அறநிலைய அமைச்சர் மாண்புமிகு. வீரப்பன் அவர்கள் மண்டபத் திறப்புரையைச் சிறப்புரையாக ஆற்றினர்.

கருத்தரங்கவிழாவை முன்னிட்டுக் காஞ்சி காமகோடிபீடம் ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகள் அனுப்பியிருந்த பொன்னாடையைப் புலவர் திரு. ஜய. செந்தில்நாதன் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கட்குச் சமர்ப்பித்தார்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எல்லாம் இறை செயலே என்பதை அனுபவ வாயிலாக விளக்கி ஆசியுரை வழங்கினார்கள்.

## இரண்டாம் நாள் விழா : (காலை)

12—5—84 சனிக்கிழமைகாலை 8-45மணிக்கு சேலம், டாக்டர் திருமதி. ஜெயலக்ஷ்மி குழுவினர் திருமுறைப் பண்ணிசையோடு இரண்டாம் நாள் நிகழ்ச்சி தொடங்கியது. டாக்டர் திரு. கே. செல்லப்பன் வரவேற்புரை நிகழ்த்தினர்.

குன்றக்குடி ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் ஆசியுரை அருளினார்கள். பேரூர் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்கள் தலைமையுரை யாற்றினார்கள்.

தமிழ்நாடு அரசு கல்வி அமைச்சர் மாண்புமிகு. திரு. செ. அரங்கநாயகம் அவர்கள் ஆங்கிலத் தொகுப்புநூலை வெளியிட்டுச் சிறப்புரை வழங்கினர்.

### 3 ஆவது அமர்வு: (காலை)

தஞ்சை தமிழ்ப்பல்கலைக் கழக அகராதிப் பகுதித் தலைவர் திரு. மு. அருணாசலம் அவர்கள் தலைமையில் நிகழ்ச்சி தொடங்கியது. யாழ்ப்பாணம் சிவயோக சுவாமிகளும் சைவசித்தாந்தமும் பற்றி திருமதி இரத்தினமா நவரத்தினம் உரை நிகழ்த்தினர். கௌவாய் ஆதீனச்சார்பில் சைவசித்தாந்தத்தில் ஒருமை வாதமும் பன்மை வாதமும் பற்றித் தவத்திரு சுவாமி வீரபாகு அவர்களும், டாக்டர் திரு. பி. பாண்டியன் அவர்களும் ஆய்வுரை ஆற்றினர். திருமூலர் கருதும் சைவசித்தாந்த முடிவுகள் பற்றி ஆய்வுசெய்து எழுதிய நூலை வெளியிட்டுத் திரு. டி. என். அருணாசலம் அவர்கள் ஆய்வுரை நிகழ்த்தினர்

### 4, 5 ஆவது அமர்வுகள்: (பிற்பகல்)

பிற்பகல் 2–30 மணிக்கு ஆதீனமடாலய அலுவலகத்திலும், திருநெறியதெய்வத்தமிழ்மன்றத்திலும் 4, 5 ஆவது அமர்வுகள் நிகழ்ந்தன. டாக்டர். டி. பி. சித்தலிங்கையா அவர்கள் ஆங்கில அமர்வுக்குத்தலைமை தாங்கினர். திருச்சிடாக்டர் எஸ். ஏ. இராமகிருஷ்ணன் புதிய உலகிற்குச்சைவ சித்தாந்தம் பற்றியும், திரு. ந. ரா. முருகவேள் "The Characteristics of Saiva Siddh ntha" பற்றியும், மலேயாடாக்டர்திரு. எஸ். என் கந்தசாமி சாங்கியமும் சைவசித்தாந்தமும் பற்றியும், டாக்டர் திரு. ஏ. எஸ் பிள்ளை "Conception of Grace – An evaluation" பற்றியும் உரையாற்றினர்.

தமிழ் அமர்விற்கு டாக்டர் திரு. கி. இலக்ஷ்மணன் அவர்கள் தலைமை தாங்கினர். மதுரை திருமதி. கோமதி சூரிய மூர்த்தி திருஞானசம்பந்தர் தேவாரத்தில் பதியியல் கோட்பாடுகள் பற்றியும், நெல்லை டாக்டர் திரு. க. சுப்பிரமணியம் சைவமும் சீக்கியமும் பற்றியும், மதுரை டாக்டர் என். ஜயராமன் சைவ சித்தாந்த வளர்ச்சியில் திருமந்திரம் பற்றியும் உரையாற்றினர்.

### 6 ஆவது அமர்வு :

பிற்பகல் 3–30 மணிக்கு ஆங்கில அமர்வு திரு. ஓ. வி. அளகேசன் தலைமையில் தொடங்கியது. டாக்டர் திரு. தெ. ஞானசுந்தரம் சைவசித்தாந்தமும் விசிஷ்டாத்வைதமும் பற்றியும், டாக்டர். திரு. கு. சீநிவாசன் சைவசித்தாந்தமும் சமரச சன்மார்க்கமும் பற்றியும், டாக்டர் திரு. வை. இரத்தினசபாபதி 'Meikandar and His Methodology' பற்றியும் ஆய்வுரைகள் நிகழ்த்தினர்.

### பொதுப் பேரவை :

மாலை 6மணிக்குப்பொதுப்பேரவைதொடங்கியது. குடந்தை திரு. என். சேதுராமன் தலைமையுரை வழங்கினர். டாக்டர் ஏ. வி. ஜயச்சந்திரன் சைவ சித்தாந்தமும் கோயிற்கலைகளும் பற்றி உரையாற்றினர்.

### திருத்தாஞ்சலி :

இரவு 8 மணிக்குச் சென்னை திருமதி சித்ரா விசுவேசுவரன் குழுவினரின் தனிநடனமும், திருநீலகண்டர்நாட்டியநாடகமும் நிகழ்ந்தன.

திருச்சிராப்பள்ளி மௌன மகாலிங்கத்தம்பிரான்சுவாமிகள் நன்றியுரையோடு இரண்டாம் நாள் நிகழ்ச்சிகள் நிறைவேறின.

### மூன்றும் நாள் விழா : காலை

13—5—84 ஞாயிற்றுக்கிழமை காலை 9 மணி அளவில் சீகாழி திரு. திருஞானசம்பந்தன், திருச்சி திரு. முத்துக்கந்தசாமி குழுவினரின் தேவாரப் பண்ணிசையோடு கருத்தரங்கம் தொடங்கியது. வித்துவான் ஸ்ரீமத் சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகள் வரவேற்புரை நிகழ்த்தினர்கள். தொண்டைமண்டல ஆதீனம் குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் ஆசியுரை வழங்கினர்கள்.

### 7 ஆவது அமர்வு

முற்பகல் 10-15 மணிமுதல் 7ஆவது தமிழ்அமர்வு தொடங்கியது. தஞ்சை திரு. டி. என். இராமச்சந்திரன் தலைமையுரை நிகழ்த்தினர். பேராசிரியர் திரு. கு. அருணாசலக் கவுண்டர் காபாலிக சைவம் பற்றியும், திரு. கு. சுந்தரமூர்த்தி சைவசித்தாந்தமும் பண்டாரசாத்திரங்களும் பற்றியும் திரு. ஆர். இராமசேஷன் சைவசித்தாந்தத்தில் வாழ்வியல் நோக்கம்பற்றியும், மதுரை டாக்டர் திரு. சு. வேங்கடராமன் நம்பி திருவிளையாடலில் இறை இயல்புகள் பற்றியும் ஆய்வுரைநிகழ்த்தினர்.

### 8 ஆவது அமர்வு

முற்பகல் 11-30 மணிக்கு 8ஆவது ஆங்கிலஅமர்வு தொடங்கப்பெற்றது. சென்னை திரு. பெ. திருஞானசம்பந்தம் தலைமையுரை வழங்கினர். சென்னை திரு. ஜி. எம். முத்துசாமிப் பிள்ளை புதிய உலகிற்குச் சைவசித்தாந்தம் பற்றியும், போலந்து திரு. ஹெர்மன் சைவ சித்தாந்தத்தில் திரிபதார்த்தங்கள் பற்றியும் டாக்டர் திரு. ஆர். கோலப்ப பிள்ளை மேலைநாட்டில் சைவ சித்தாந்தம் பற்றியும் ஆய்வுரைகள் நிகழ்த்தினர்.

### 9 ஆவது அமர்வு

பிற்பகல் 2-30 மணிக்கு 9ஆவது தமிழ் அமர்வுதொடங்கியது முதுமுனைவர் திரு. ச. தண்டபாணி தேசிகர் தலைமையுரை யாற்றினர். தூத்துக்குடி டாக்டர் திரு. ச. கணபதிராமன் சிறு தெய்வ வழிபாட்டில் சைவ சித்தாந்தப்படிமங்கள் பற்றியும், தஞ்சை டாக்டர் திரு. ம. சா. அறிவுடைநம்பி "சைவமும் சமண மும்" பற்றியும் டாக்டர் செல்வி. சிவ. பார்வதி "நாட்டுப்புறப் பாடல்களில் சைவம்" பற்றியும் திருச்சி திரு. அந்தோணிகுருசு "கடவுட்கொள்கையில் சைவம் பௌத்தம், சமணம்," பற்றியும் ஆய்வுரைகள் வழங்கினர்.

### 10 ஆவது அமர்வு

பிற்பகல் 4மணிக்கு 10ஆவது ஆங்கிலஅமர்வுதொடங்கியது பாண்டிச்சேரி திரு. என். ஆர். பட் தலைமையுரையாற்றினர். மதுரை டாக்டர் திரு. கி. இ. சூரியமூர்த்தி சைவசித்தாந்தமும் இயற்பியலும் பற்றியும் டாக்டர் திரு. எஸ். கங்காதரன் சிவஞானபோதம பற்றியும் சென்னை டாக்டர் திரு. சபாரத்தினம் ஆணவமலமும் சிவாகமங்களும் பற்றியும் சென்னை செல்வி உஷா சௌகான் Sivagnana Bodham பற்றியும் ஆய்வுரைகள் நிகழ்த்தினர்.

### கருத்தரங்கத் தனி அமர்வுகள்

கருத்தரங்க அமர்வுகள் திருநெறிய தெய்வத்தமிழ் மன்றத் திலும், கல்லூரி வழிபாட்டு மன்றத்திலும் நடைபெற்றன. கல்லூரி மன்றத்தில் 11—5—84 பிற்பகல் டாக்டர் திரு. வை. இரத்தினசபாபதி அவர்கள் தலைமையில், அண்ணாமலைப் பல்கலைக்கழகம் திரு. அரங்கசாமி நடராசரின் ஆனந்ததாண் டவம் பற்றியும், திரு. சி. பன்னீர்செல்வம், சைவசித்தாந்தம் நடைமுறைத் தத்துவம் என்பது பற்றியும் டாக்டர் செல்வி தேவதத்தா சைவ சித்தாந்தமும் சமணமும் பற்றியும் சென்னை திரு. இராஜசிங்கன் The Concept of the Dualities in Saiva Siddhantna பற்றியும் மயிலாடுதுறை திரு. ஆர். அரங்கநாதன் சைவசித்தாந்தமும் அத்வைதவேதாந்தம் பற்றியும், சேலம் திரு. எஸ். இராமலிங்கம் கர்மம் பற்றிச் சைவ சித்தாந்தமும் பகவத்கீதையும் பற்றியும் ஆய்வுரைகள் வழங்கினர்

### தனி அமர்வு 2

12—10—84 பிற்பகல் 2-30 மணிமுதல் தனிஅமர்வு நிகழ்ந் தது. சென்னை திரு. ந. ரா. முருகவேள் தலைமையுரை வழங்கினர். சென்னை திரு. கே. சபாரத்தின சிவாசாரியார்

இந்துமதமும் சைவ சித்தாந்தமும் பற்றியும், ஈரோடு திரு மு. சதாசிவம் சைவநெறியும் சன்மார்க்கமும் பற்றியும். சென்னை திரு. பெ. சத்தியவேல்முருகன் சைவ சித்தாந்தமும் இந்திய தத்துவச் சிந்தனையும் பற்றியும், மயிலம் திரு. பழ. முத்தப்பன் சிவஞான சித்தியாரும் பௌத்தமும் பற்றியும், ஆடுதுறை திரு. வே. மகாதேவன் சாசனங்களில் சைவசித்தாந்தம் பற்றியும், கோவை திரு. கே. எஸ். முருகன் புத்தமும் சைவமும் பற்றியும், செங்கல்பட்டு திரு. பா. வரதராசன் இந்தியநாட்டுத் தத்துவங்களில் சைவசித்தாந்தமும் ஏனைய தத்துவங்களும் பற்றியும், நெல்லை திரு. சி. சு மணி எழுதாமறையும் எழுதும்மறையும் பற்றியும், திண்டிவனம் திருமதி. திருச்சிவநங்கை ஏன் சைவ சித்தாந்தம் பயிலவேண்டும் என்பது பற்றியும் ஆய்வுரைகள் வழங்கினர்.

## ஆய்வரங்கம்

பண்டாரக்கட்டில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருமுன்னர் உலக அளவில் சைவசித்தாந்தம் பரவுதற்குரிய வழிமுறைகள் பற்றிய ஆய்வரங்கம் நடைபெற்றது.

டாக்டர் திரு. கே. லக்ஷ்மணன், டாக்டர் திரு. ஆர். பாலசுப்பிரமணியம், டாக்டர் திரு. சித்தலிங்கையா, முதுமுனைவர் திரு. ச. தண்டபாணி தேசிகர், திரு. மு. அருணாசலம், கோலாலம்பூர் திரு. வி. கே. பாலசுந்தரம், மலேயா டாக்டர் திரு, எஸ். என். கந்தசாமி, டாக்டர் திரு. இரா. தண்டாயுதம், இலங்கை திருமதி. இரத்தினமாநலரத்தினம் முதலியோர் கலந்து கொண்டனர். ஆய்வரங்கம், உலக அளவில் சைவசித்தாந்த நெறிபரவ, பல தீர்மானங்களை வடிவமைத்தது.

## கருத்தரங்க நிறைவுவிழா

13—5—84 ஞாயிறு மாலை 6-30 மணிக்குக் கருத்தரங்க நிறைவுவிழா நடைபெற்றது. தமிழ்நாடு சட்டப்பேரவைத் தலைவர் மாண்புமிகு. க. இராசாராம் அவர்கள் தலைமையேற்றார். மதுரை அறநெறி அண்ணல் திரு. கி. பழனிப்பனார் சதமணிக் கோவை நூலை வெளியிட்டு உரையாற்றினார். உயர்நீதிமன்ற நீதிபதி மாண்புமிகு ஆர். செங்கோட்டுவேலன் திருமந்திரம் 4, 5, 6 ஆம் தந்திரங்கள் நூலைவெளியிட்டுக் கருத்தரங்கக் கண்ணோட்டம் என்ற தலைப்பில் தொகுப்புரை வழங்கினார். மாண்புமிகு. க. இராசாராம் அவர்கள் கருத்தரங்க நிறைவுரையை வழங்கிச் சைவ சித்தாந்த மேல்நிலை ஆய்வு மையத்தைத் தொடங்கி வைத்தார். துணைவேந்தர் திரு. பி. எஸ். மணிசுந்தரம் அவர்கள் மேல்நிலை ஆய்வுமையத்தை, பாரதிதாசன்பல்கலைக்கழகத்தோடு இணைத்து நடத்தும் அனுமதி உரையைத் தெரிவித்தார்.

*சைவசித்தாந்தக்கலாநிதி*

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் அனைவர்க்கும் ஆசி அருளிக் கருத்தரங்க விழாவின் நிறைவில் ஒன்பது அறிஞர் களுக்குப் பொன்னுடை போர்த்தி "சைவசித்தாந்தக்கலாநிதி" என்ற பட்டம் பொறித்த வெண்பொன் பதக்கம் அளித்துச் சிறப்புச் செய்தருளினார்கள். பட்டம் பெற்ற ஆய்வறிஞர்கள் டாக்டர் கே. இலட்சுமணன், டாக்டர் ஆர். பாலசுப்பிரமணியம், டாக்டர் என். ஆர். பட், டாக்டர் எஸ். என். கந்தசாமி, டாக்டர் இரா. தண்டாயுதம், திருமதி. கொப்பேட்ரேயர், திருமதி. இரத்தி னமா நவரத்தினம், திரு. வி. கே. பாலசுந்தரம் ஆகியோராவர். டாக்டர் திரு. ஏ. வி. ஜெயச்சந்திரன் அவர்களுக்குத் திருக் கோயில் கலாநிதி என்ற பட்டமளித்துப் பொன்னுடைப் போர்த்தி ஆசியருளினார்கள்.

தமிழ்நாடு அரசின் தமிழ்வளர்ச்சித்துறையில் பதவி உயர்வு பெற்ற டாக்டர் ஔவை. நடராசன் அவர்கட்குப் பொன்னுடை போர்த்தி ஆசிவழங்கினார்கள். நூல்வெளியீட்டுப் பணியைச் சிறக்கச்செய்த திரு. டி. என். இராமச்சந்திரன் அவர்கட்குப் பொன்னுடை போர்த்தி ஆசி கூறினார்கள். கல்லூரி முதல்வர் திரு. வி. சா. குருசாமி தேசிகர் அனைவருக்கும் நன்றி கூறினர். இரவு 9 மணிக்கு, கணநாதர் பொம்மை நாடகசபையினரின் வள்ளியம்மைத் திருமணம் பொம்மலாட்டம் சிறப்பாக நிகழ்ந்தது.

---

## அனைத்துலக சைவசித்தாந்த முதல் கருத்தரங்கத் தீர்மானங்கள்

1. அனைத்துலக சைவசித்தாந்த முதற் கருத்தரங்கைப் பயனுடைய வகையில் சிறப்புற நடத்த ஆவன செய்த தருமை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கட்கும், பாரதி தாசன் பல்கலைக்கழகத்துணைவேந்தர் அவர்கட்கும் இப்பேரவை தனது நெஞ்சார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்கிறது.

2. சைவசித்தாந்த முதற்கருத்தரங்கினுல் அடைந்த நற் பலன்கள் சைவ உலகத்திற்குத் தொடர்ந்து கிடைக்கும் வகையில் உலகின் பிற பகுதிகளிலும் அனைத்துலக சைவ சித்தாந்தக் கருத்தரங்குகளை நடத்த இப்பேரவை அன்புடனும் ஆர்வத்துடனும் வேண்டுகின்றது.

3. இரண்டாவது அனைத்துலக சைவசித்தாந்தக் கருத்தரங்கினை 1986 ஆம் ஆண்டு மலேசியாவில் நடத்த மலேசிய அன்பர்கள் கேட்டுக்கொண்ட வண்ணம் ஏற்றுக்கொள்ளப் படுகிறது.

4. சித்தாந்த சைவநூல்கள் கல்லூரிகளில் சிறப்புப் பாடமாக வைக்கப்பட்டிருப்பதற்குக் கல்வி நிறுவனங்களுக்கு நன்றி தெரிவித்து, எல்லாக் கல்வி நிலையங்களிலும் பொதுப் பாடத் திட்டத்தில் சேர்த்துக்கொள்ள ஆவனசெய்யத் தமிழக அரசை இக்கருத்தரங்கம் கேட்டுக்கொள்கின்றது.

5. சமயதத்துவக் கல்வியைப் பள்ளிக் கூடங்களில் அறிமுகப் படுத்தினால் மாணவர்கள் நல்லறிவு பெற்று வருங்கால நன்மக்களாக விளங்குவர் என்பதைக் கருத்தில் கொண்டு சமயதத்துவக் கல்வியைப் பாடத்திட்டத்தில் இணைக்கும்படி தமிழக அரசினை இக்கருத்தரங்கம் கேட்டுக்கொள்கிறது.

6. முப்பொருள் உண்மையை முதலாகக்கொண்டு வழங்கி வரும் சைவசித்தாந்த மரபினை வழுவாது பின்பற்றி வளர்க்குமாறு கௌவை ஆதீனம் சைவ சித்தாந்த church இனரை இக்கருத்தரங்கு கேட்டுக்கொள்கிறது.

7. கடவுளும், உயிர்களும், பாசமும் படைக்கப்படாத அனாதி முப்பொருள் உண்மை என்ற கோட்பாடும், கடவுள் உயிர்களுடன் ஒன்றாகவும், வேறாகவும், உடனாகவும், மூன்று நிலைகளில்நின்று அருள்பாலிக்கிறார் என்ற சுத்த அத்துவிதம் என்றும் புனித அத்துவிதம் என்றும் கூறப்பெறும் கோட்பாடும், சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் என்று இக்கருத்தரங்கம் மக்களுக்கு அறிவிக்கிறது.

8. திருமடத்தைச் சார்ந்த ஆலயங்கள் சைவசமயக் கருவூலங்களாக விளங்குகின்றன. அவற்றின் அமைப்பையும், சிறப்பையும், உட்பொருள்களையும் பொதுமக்களுக்குவிளக்கும் வகையில் அருங்காட்சியகம் அமைக்கவும் அதற்குரிய ஏற்பாடுகளைத் தொடங்கவும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தை இக் கருத்தரங்கம் வேண்டிகொள்கிறது.

9. சரியை, கிரியை, யோகம், ஞானம் பற்றிய சிறு நூல்களைத் தொகுத்துப் பொருத்தமான விளக்கத்துடன் தமிழில் வெளியிட ஆவன செய்யுமாறும் இதற்காகச் சைவ சித்தாந்த அறிஞர்களைக்கொண்ட ஒரு குழு நியமித்து ஆவன

செய்யுமாறும் சமய தத்துவ நிறுவனங்களை இக்கருத்தரங்கம் கேட்டுக்கொள்கிறது.

10. சைவசித்தாந்தத் தத்துவ அறிவு பெறுவதற்கு அளவை நூல் அறிவு இன்றியமையாதது. அளவை நூலாகிய கருவிநூல் அறிவைச் சைவசித்தாந்தப் போதகர்கள் பெறும்பொருட்டுத் தக்கவர்களைக்கொண்டு கோடைக்கால வகுப்புகள் நடத்த சமய தத்துவ நிறுவனங்களை இக்கருத்தரங்கம் கேட்டுக் கொள்கிறது.

11. பாரத அரசு வேதங்களை வருங்காலச் சந்ததியினருக்கு "சந்தஸ்" முதலிய பாரம்பரிய முறைகளில் ஓதச்செய்து பதிவு நாடாக்களில் பதிவுசெய்வதற்கு உதவிசெய்வதுபோல, ஆகமங்களைப் பதிவு நாடாக்களில் பதிவு செய்தும், தமிழ் வேதமாகிய திருமுறைகளையும் பழங்காலத் தமிழ்ப் பண் முறைகளையும், ஓதச்செய்து பதிவு செய்து மக்களிடையே பரவச் செய்ய மைய, மாநில அரசுகளை இக்கருத்தரங்கம் கேட்டுக் கொள்கிறது.

12. சிவாலயங்கள், சைவத் திருமடங்கள், பிற அறநிலையங்கள் பெரும்பாலும் நிலங்களையே நம்பியிருப்பதாலும், அண்மைக் காலத்தில் இயற்றப்பட்ட குத்தகைதாரர் பாதுகாப்புச் சட்டத்தினுல் குத்தகை வசூலாகாமல் ஆலயங்களுக்கும், திருமடங்களுக்கும் நிதித்தட்டுபாடு ஏற்பட்டிருப்பதால், ஆலயங்களும் திருமடங்களும் தொடர்ந்து பணிசெய்வதற்கு ஆலய திருமட நிலங்களுக்குக் குத்தகைதாரர் பாதுகாப்புச் சட்டத்திலிருந்து விலக்கு அளிக்கக் கருத்துத்தெரிவித்திருக்கும் தமிழக அரசைப் பாராட்டி, இதனை விரைந்து செயல்படுத்தும் படி இக்கருத்தரங்கம் வேண்டுகிறது.

13. மேலும் சமயவளர்ச்சியில் ஈடுபட்டுள்ள பிறநிறுவனங்களும் இதற்குரியதீர்மானத்தை நிறைவேற்றி அரசுக்கு அனுப்பி வைக்கும்படி கேட்டுக்கொள்கிறது.

14. இலங்கை வாழ் தமிழர்களின் பிரச்சினைகளையும், பஞ்சாப் பிரச்சினைகளையும் சுமுகமானமுறையில் தீர்த்துவைத்து அமைதியான சூழ்நிலை மீண்டும் நிலவ பாரத, ஸ்ரீலங்கா அரசுகள் விரைந்து வழிகோலவேணுமாய் இக்கருத்தரங்கு கேட்டுக்கொள்கிறது.

---

தருமையாதீனம்
அனைத்துலக சைவசித்தாந்தக் கருத்தரங்கில்

## சைவசித்தாந்தக்கலாநிதி, திருக்கோயிற்கலாநிதி

### பட்டங்கள் பெற்ற ஆய்வறிஞர்கள்

சைவசித்தாந்தக்கலாநிதி

**1. டாக்டர் திரு. கி. லக்ஷ்மணன் — ஸ்ரீலங்கா.**

இவர் யாழ்ப்பாணம் பலாலியில் பிறந்தவர். காசிப்பல்கலைக் கழகத்தில் எம்.ஏ.,(தத்துவம்) அண்ணுமலைப்பல்கலைக்கழகத்தில் எம். ஏ., (தமிழ்)பயின்று இலங்கைப்பல்கலைக்கழகத்தில்டாக்டர் பட்டம் பெற்றவர். இலங்கையில் கல்வி இயக்குநராகப் பணி புரிந்தவர். இவர் எழுதிய 'இந்திய தத்துவஞானம்' இலங்கை இந்திய அரசுகளின் பரிசு பெற்ற நூல். கம்பனது கதாபாத்திரங் கள், பாரதத்தூதுவர் முதலிய நூல்களையும் மற்றும் பல ஆய்வுக் கட்டுரைகளையும் இவர் எழுதியுள்ளார். இலங்கையில் நடை பெற்ற அகிலஉலக இந்துமாநாட்டின் செயலராக இருந்து அம் மாநாட்டை வெற்றிபெற நடத்தியவர்.

**2. டாக்டர் திரு. இரா. பாலசுப்பிரமணியம் — சென்னை.**

இவர் தஞ்சைமாவட்டம் திட்டையில் பிறந்தவர். எம். ஏ., பி. எச்டி, பி. லிட். பட்டங்கள் பெற்றவர். சென்னைப் பல்கலைக் கழகத்தில் இராதாகிருஷ்ணன் மெய்யுணர்வு மேல்நிலைக்கல்வி நிறுவனத்தின் இயக்குநராகப் பணிபுரிந்து வருபவர். மேலை நாடுகள் பலவற்றிற்கும் சென்று தத்துவக் கொள்கைகளை விளக்கி வந்துள்ளவர்.

**3. டாக்டர் திரு. என். ஆர். பட். — பாண்டிச்சேரி**

இவர் சென்னைப் பல்கலைக்கழகத்தில் சிரோமணி, எம். ஏ., வகுப்புக்களில் தேர்ந்து பாரிஸ் பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்றவர். பாண்டிச்சேரி பிரஞ்சு இந்தியப்பண்பாட்டு ஆய்வுநிறுவனத்தில் வடமொழித்துறைத் தலைவராகப் பணிபுரி பவர். ரௌரவாகமம், அஜிதாகமம், மிருகேந்திராகமம் முதலிய சைவகாமங்கள் பலவற்றை ஆய்வு செய்து அச்சிட்டுள்ளார். ஆகமநூல்களைத் தொகுத்தும் வெளியிட்டும் சமயநூற் பணிகள் பலவற்றை ௸ ஆய்வு நிறுவனத்தின் வாயிலாகச் செய்து வருகிறார்.

**4. டாக்டர். திரு. சோ. ந. கந்தசாமி — மலேயா.**

ஜெயங்கொண்ட சோழபுரம் திரு. நடராஜ் முதலியாரின் குமாரர். அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் பயின்று எம். ஏ., எம். லிட், பி. எச்டி, மொழியியல், டிப்ளமா வடமொழி டிப்ளமா (முதல் வகுப்பு) தேர்ச்சி பெற்றவர். தமிழிலும் ஆங்கிலத்திலும் 15 நூல்கள் எழுதியுள்ளார். ஆய்வுக்கட்டுரைகள் பல எழுதியுள்ளார். சமயவகுப்புக்கள் பலவற்றை நடத்தியுள்ளார். கோலாலம்பூரில் மலேயா பல்கலைக் கழகத்தின் இந்திய ஆய்வியல் துறையில் பேராசிரியராகப் பணிபுரிந்து வருபவர்.

**5. டாக்டர். திரு. இரா. தண்டாயுதம் — மலேயா.**

இந்திய அரசின் சாகித்ய அகாடமி பரிசு பெற்றவர். 15 நூல்கள் எழுதியுள்ளார். தமிழிலும் ஆங்கிலத்திலும் ஆய்வுக் கட்டுரைகள் பலவற்றைஎழுதி வெளியிட்டுள்ளார். மலேயாவில் பலசமயக் கூட்டங்களிலும் சைவ சமய வகுப்புக்களிலும் பங்கேற்றுச் சொற்பொழிவுகள் ஆற்றியுள்ளார்.

**6. திருமதி. இரத்தினமா நவரத்தினம் — இலங்கை.**

இலங்கையில் கல்வித்துறை இயக்குநராகப் பணிபுரிந்தவர். யாழ்ப்பாணம் இராமநாதன் கல்லூரி முதல்வராகப் பணியாற்றியவர். திருவாசகத்தின் அன்புக்கட்டளைகள் பற்றி ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். மேலைநாடு கீழைநாடுகளின் சமய தத்துவக் கல்விமுறை முதலிய நூல்களை எழுதியுள்ளார். லண்டன் ஆக்ஸ்போர்டு மலேயா பனாரஸ் பல்கலைக் கழகங்களில் தத்துவ விரிவுரைகள் ஆற்றியுள்ளார்.

**7. திருமதி. கொப்பேட்ரேயர் — கனடா.**

முதுகலைப் பட்டம் பெற்று, கனடா பல்கலைக் கழகத்தில் பேராசிரியர் திரு. சிவராமன் அவர்களிடம் டாக்டர் பட்டத் துறைக்கு ஆராய்ச்சி மாணவராகச் சேர்ந்து பயின்று வருகிறார். நம் நாட்டுச் சைவசித்தாந்த சமய தத்துவங்களைப் பற்றி ஆய்வு செய்து சிறந்த ஆய்வேட்டைத் தயாரித்துள்ளார்.

**8. திரு. வே. க. பாலசுந்தரம் — மலேயா.**

மலேயாவில் பிறந்தவர், இலங்கையைச் சேர்ந்தவர் இலங்கைப் பல்கலைக்கழகத்தில் பி. ஏ., பட்டம் பெற்றவர். வழக்கறிஞராக இலங்கையில் பணியாற்றி இங்கிலாந்தில் பாரிஸ்டர் அட் லா பட்டம் பெற்றவர். மலேயாவில் நீதித் துறையில் பணியாற்றி வருகிறார். மலேயாவில் இலங்கைச்சைவர்

சங்கத்தின் தலைவர், ஆன்மாக்கள் அநாதியானவை, சைவ சித்தாந்தம் பன்மைத்தத்துவமே முதலிய நூல்களை எழுதியுள்ளார்.

திருக்கோயிற்கலாநிதி

**9. டாக்டர். திரு. ஏ. வி. ஜயச்சந்திரன் — சென்னை.**

தமிழ், ஆங்கிலம், பிரஞ்சு, வடமொழி அறிந்தவர். மதுரைக் கோயில்பற்றிஆகமம், கலை,வரலாறு,சிற்பம்,ஓவியம்,இலக்கியம் உட்படப் பல்வகை நோக்கில் ஆய்வு செய்து நூல் எழுதியவர். அரசுத்துறையில் உயரதிகாரியாக விளங்கி மதுரைக் கோயில் கலைக்கண்காட்சியைச் சீர்பெற அமைத்துத் தந்தவர். திருமலை திருப்பதி தேவஸ்தானத்தில் ஓவியசிற்பக் கலைக்கூடத்தை உருவாக்கியவர். ஆகமங்கள்,ஆலயக்கலைகள்,கல்வெட்டுக்கள், வரலாற்றுச் செய்திகள் முதலியவற்றை ஆய்வுசெய்து அனைத்து உலக தேசியக் கருத்தரங்கில் கட்டுரை வழங்கியவர். இத்துறையில் நூல்கள் பல எழுதி வெளியிட்டவர். பி. எச். டி. மாணவர் பலர்க்கும் வழிகாட்டியாய் விளங்கிவருபவர்.

---

**கடிதம் :**

G. Balasubramanian, D. com., "MANGALAM",
14-B, Sree Kovalan Nager,
MADURAI – 625 003.
1—6—84

தருமையாதீனகர்த்தர் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுடைய பொற்பாத கமலங்களுக்கு வணக்கம்.

மதுரை ஸ்ரீ மீனாக்ஷிகல்யாண மண்டபத்தில் 29—4—1984 நடைபெற்ற "உழவாரம் – திருமுறை" மாநாட்டில் ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் வாயிலாக இவ்வுலகின்பிணி அஃகற்றும் மாமருந்தினை ஆசியாக வழங்கிய பேறு கிடைக்கப் பெற்றவர்களுள் அடியேனும் ஒருவன்.

தனி மனிதனானாலும் சரி, ஒரு நாடானாலும் சரி "இறையுணர்வு" எந்த நிலையில் கதித்து நிற்கின்றதோ அந்த அளவு நலம் நம்மிடம் அமையும் – என்பதனைக் கேட்போர் உள்ளம் உருகும்படி ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் வழங்கிய வாழ்த்து மனிதகுலம் வாழவேண்டுமே என்று ஆன்ம மூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானிடம் விண்ணப்பிப்பதாக இருந்தது.




## ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

(இரக்தாக்ஷிஞு ஆடிமீ 1உ முதல் 32உ முடிய)
(16—7—1984 முதல் 16—8—1984 முடிய)

| | | | |
|---|---|---|---|
| | | ரா | |
| சந் | இராசி | | சூ பு சு |
| | | | |
| கு | கே | சனி செ | ல/ |

| | | | |
|---|---|---|---|
| கே | | செ | |
| பு | அம்ஸம் | | சூ கு |
| ல/ சனி | | | |
| | சந் | | சு ரா |

ஸ்ரீ இரக்தாக்ஷிஞு ஆடிமீ 1உ சோமவாரம் அவிட்ட நக்ஷத்திரம் பத்திரைகரணம் கூடிய காலத்தில் சூரிய உதயம் முதல் 10 நாழிகை 57 வினுடிக்குக் கன்னியாலக்கினத்தில் லோக ரட்சகரான சூரிய பகவான் லோக சுபிட்சார்த்தத்தை முன்னிட்டு மிதுன ராசியிலிருந்து கடகராசி சங்கிரமணமாக ஆடி மாதப் பிரவேசம் செய்தருளுகின்றார். அன்று தக்ஷணாயன புண்ணிய காலமாகும். சஸ்யாதிபதி சந்திரன் ஆவார். அதன்பலன் பிரஜைகளுக்குச் சுகம் தரும். நல்ல மழை பெய்யும். பசுக்கள் பால் வஸ்துக்கள் விருத்தியாகும். சங்கிரமணகால கிரகஸ்திதியினுல் உலகில் நூல் ஜவுளி நவீன வஸ்துக்களின் உற்பத்தி பெருகிவரும். நாடுகளில் நல்ல மழைபெய்து நீர்வளம் நிலவளம் பெருகி உணவுப் பயிர்களில் அபிவிருத்திபலன் ஏற்படும். பிரஜைகளுக்கு நல்ல பொருளாதாரமும் அரசாங்க நன்மைகளும் ஏற்பட்டு சௌகரிய வாழ்க்கை நடத்துவர். தேசங்களில் ஆன்றோர்களால் தர்ம காரியங்கள் சிவபுண்ணிய கைங்கர்யங்கள் நடந்துவரும். மக்கள் நல்வழி பற்றி உய்வார்கள்.

உலகில் உள்ள திருமடங்கள் ஆசாரிய பீடங்களில் ஈஸ்வரனருளினால் தவமுனிவர்களாக வந்து நித்தியம் சிவபெருமானை பூசித்து சிவராஜயோகத்தில் திருவீற்றிருக்கின்ற சிவஞான குருமகான்கள் குருமகாசந்நிதானங்கள் லோகத்திற்கு சாஸ்திரம் விவேக நற்சிந்தை, மனம், வாக்கு செயல்களில் நேர்மை கடைபிடித்தல் அதனின்றும் ஈஸ்வரனருளினால் திருவடைதல் ஆகிய தாத்பரிய உண்மைகளை தம்திருவாய் மலர்ந்து பகர்ந்து அருளிச் செய்வார்கள். குருவழி நிற்கும் சிஷ்ய கோடிகள் பக்த கோடிகளுக்கு ஆசியருளி அருள்பிரசாதம் வழங்குவர். தேசங்களில் எங்கும் தேவாலயங்களில் நித்தியம் ஆறுகால பூசைகள் நடந்துவரும். லோகம் அறவழியில் இயங்கும். எல்லா பிரஜைகளும் தெய்வபக்தி மேலிட்டு ஈஸ்வரனைத் தரிசித்து அருள் பெற்றுச் சீரிய வாழ்க்கை நடத்துவர்.

1. மேஷம் :- அசுவதி – பரணி– கார்த்திகை – ¼
(சு. சே. சோ. லா. - லி. லு. லே. லோ. – அ.)

மேஷராசி 9 பாதங்களும் மிச்சிர பலனைக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் நல்ல பணவருமானம் வரும். ஒப்பந்தம் பத்திர லிகிதங்களில் நல்லன வந்துசேரும். இராஜகண்யமாக எல்லாக் காரியங்களையும் நடத்தச் செய்யும். பூமி இயந்திரங்களில் விருத்தி பலன் ஏற்படும். நவீன வஸ்துவின் பிராப்தி பால் பிராப்தி தரும். தாரபுத்திரர்களின் நலம் நன்றாக இருந்து வரும். ஜூலை 16, 17, 21, 22 23, 26, 27, 28 ஆகஸ்டு 1, 2, 3, 4, 10, 11, 12, 13, 14 தேதிகளில் தனதாயம், ஜெயம், தெய்வ தரிசனம் ஆகிய நற்பலன் ஏற்படும். ஆகஸ்டு 5, 6, 7 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

2. ரிஷபம் :- கார்த்திகை ¾ – உரோகிணி – மிருகசீஷம் ½
(இ. ஊ. ஏ. – ஒ. வ. வி. வு. – வே. வோ.)

ரிஷபராசி 9 பாதங்களும் சுப்மான பலனைத்தரும். குடும்ப அபிவிருத்தியில் தனவருமானங்களில் நல்ல ஸ்திதியை ஏற்படுத்தி வரும். ஜூலை 23உ ஆனால் பத்திர லிகிதங்களில் நல்லன ஏற்படுதலும், திரண்ட பொருள் கைக்கு வருதலும் ஆகும். பொன்மணி பூஷணம் தரும். ஆகஸ்டு 3உ க்கு நல்ல வாகனம் தரும். எல்லாக் காரியங்களிலும் திருப்தி நிலைமையை ஏற்படுத்தும். தாரபுத்திரர்களின் நலம் நன்றாக இருந்துவரும், ஜூலை 16, 17, 18, 19, 20, 23, 24, 25 ஆகஸ்டு 3, 4, 5, 6, 7, 13, 14, 15, 16 தேதிகளில் விசேஷ நன்மைகளை ஏற்படுத்தும். ஆகஸ்டு 8, 9 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

3. மிதுனம் :- மிருகசீர்ஷம் ½ - திருவாதிரை - புனர்பூசம் ¾
( கா. கி. - கு. க. ஸ. ச்சா. - கே. கோ. ஹ. )

மிதுனராசி 9 பாதங்களும் மிச்சிர பலனுக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் தனவருமானம் மூன்று விதங்களில் வரும். நல்ல பூஷணம் தரும். ஜுலை 30உ முதல் பூமி இயந்திரங் களில் விருத்திபலனை உண்டு பண்ணும். பத்திர லிகிதங்களில் அரசாங்கத் தொடர்புள்ள விஷயங்களில் மாதக்கடைசியில் நல்லன ஏற்பட்டு வரும். வாகனசுகம் திருப்தியளிக்கும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஜுலை 18, 19, 21, 22, 26, 27, 30, 31 ஆகஸ்டு 5, 6, 7, 8, 9, 15, 16 தேதி களில் தனுதாயம், காரிய ஜெயம், ஊக்கம் ஆகிய நற்பலன் ஏற்படும். ஆகஸ்டு 10, 11 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

4. கடகம் :- புனர்பூசம் ¼ - பூசம்- ஆயில்யம்.
( ஹி. - ஹு. ஹே. ஹோ. ட. - டி. டு. டே. டோ. )

கடகராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் தனவருமானங்கள் கணிசமாக வரும். வித்து வத்துவம் கலைத்துறைகளில் சிறப்புத்தரும். நல்லோர்பிரபலஸ்தர் சந்திப்பு நல்விஷய உரையாடல் சம்பவிக்கும். மந்தஸ்திதியில் தயங்கியிருந்த காரியங்கள் விரைவாக நடக்கும். பூமியில் விருத்திபலன் ஏற்படும். ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி சுவாமிக்கு அருச் சனுபிஷேகம்செய்தலினின்றும் தேகஉஷ்ணதிக்கம் நீங்கிச்சுகம் தரும். ஜுலை 21, 22, 23, 24, 25, 28, 29 ஆகஸ்டு 1, 2, 8, 9. 10, 11 தேதிகளில் தனுதாயம், ஜெயம், தெய்வதரிசனம், புண்ணிய தீர்த்தபலன் ஆகிய நற்பலன் தரும். ஜுலை 16, 17, 18 ஆகஸ்டு 13, 14, 15 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

5. சிம்மம் :- மகம் - பூரம் - உத்திரம் ¼
( ம. மி. மு. மே. - மோ. ட. டி. டு. - டே.)

சிம்மராசி 9 பாதங்களும் மிச்சிர பலனுக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் தனவருமானம் வந்துகொண்டிருக்கும். பல விதங்களில் நிர்ப்பந்தமாகச் செலவுகளும் ஏற்படும். எல்லாக் காரியகளையும் மனேதைரியமாகச் செய்ய அனுகூலங்கள் ஏற்பட்டுக் கொண்டிருக்கும். வீடு வாகனங்களில் நல்ல சௌ கரியம் இருந்துவரும். தாரபுத்திரர்களின் சௌக்கியம்

நன்றாக இருந்து வரும். ஜுலை 16, 17, 23, 24, 25, 26, 27, 30, 31 ஆகஸ்டு 3, 4, 10, 11, 13, 14 தேதிகளில் தனதாயாதி நற்பலன் களையளிக்கும். ஜுலை 19, 20 ஆகஸ்டு 15, 16 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

6. கன்னி :- உத்திரம் ¾ – ஹஸ்தம் – சித்திரை ½
(டோ. ப. பி. – பு. ஷ. ண. ட. – பே. போ.)

கன்னியாராசி 9 பாதங்களும் சுபபலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் தனவருமானம் மூன்று விதங்களில் வரும். ஜுலை 30உ முதல் பூமி இயந்திரங்களில் முதலீடு செய்தல், அபிவிருத்தி ஏற்படுதல் ஆகும். டாம்பீகம் அல்லது கௌரவ ஸ்திதியில் மற்றவர் முன்னேற்றத்திற்கு ஈடுபாடு ஆகும். வீடு வாகனங்களில் நல்ல சுகானுபவம் தரும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். ஜுலை 16, 17, 18, 19, 20, 26, 27, 28, 29 ஆகஸ்டு 1, 2, 5, 6, 7, 12, 13, 14, 15, 16 தேதிகளில் தனதாயாதி நற்பலன்களையளிக்கும். ஜுலை 21, 22 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

7. துலாம் :- சித்திரை ½ – சுவாதி – விசாகம் ¾
(ர. ரி. – ரு. ரே. ரோ. தா. – தி. து. தே.)

துலாராசி 9 பாதங்களும் சுபபலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் பணவருமானங்கள் கணிசமாக வந்து கொண்டிருக்கும். வித்தியா வியாபாராதிகளில் உத்தியோகத்தில் முன்னேற்ற ஸ்திதியும் பதவி உயர்வு ஏற்படுதலும் ஆகும். ஜுலை 30உ முதல் பூபாக்கியத்தில் நல்லன ஏற்படும். வீடு பிராப்தி வாகன பிராப்தியில் நல்ல சௌகரியம் ஏற்படும். தாம்பத்திய வாழ்வில் சுமுகமும் நிலவும். ஜுலை 19, 20, 21, 22, 28, 29, 30, 31 ஆகஸ்டு 3, 4, 8, 9, 15, 16, இத்தேதிகளில் தனதாயம் பிரவிருத்திகளில் ஆயத்தம், நல்லன ஏற்படுதல் ஆகியவையாகும். ஜுலை 23, 24 25 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

8. விருச்சிகம் :- விசாகம் ¼ – அனுஷம் – கேட்டை.
(தோ. – ந. நி. நு. நே. – நோ. ய. யி. யு.)

விருச்சிகராசி 9 பாதங்களும் மிச்சிர பலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் பணவருமானங்கள் மதிப்பாக வந்து கொண்டிருக்கும். பூமி இயந்திரங்களில் முன் செலவு இருப்பினும் அபிவிருத்திபலன் ஏற்படும். ஜுலை 21உ ஆனால்

வித்தியா வியாபாராதிகளில் ஒப்பந்தம் லிகித தொடர்புள்ள விஷயங்களில் நல்லன ஏற்பட்டு வரும். எல்லாக் காரியங்களும் சமயோசித புத்தியால் இனிது நடைபெற்றுக்கொண்டிருக்கும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஜுலை 21, 22, 23, 24, 25, 30, 31 ஆகஸ்டு 1, 2, 6, 7, 10, 11 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். ஜுலை 26, 27 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

9. தனுசு :- மூலம் - பூராடம் - உத்திராடம் ¼
( யே, யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே. )

தனுர்ராசி 9 பாதங்களும் மிச்சிர பலனுக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் நல்ல தனவருமானம் வரும். வித்துவத்துவம் கலைத்துறைகளில் உத்தியோகத்தில்பிரசித்தமாகப்பதவிஉயர்வு ஏற்படுதல் ஆகும். பெற்ரோர் சுகம் நன்ருக இருந்துவரும். வீடு வாகனங்களில் நல்ல சௌகரியமாக இருந்துவரும். தார புத்திரர்களின் நலம் நன்ருக இருந்துவரும். ஜுலை 16, 17, 18, 23, 24, 25, 26, 27 ஆகஸ்டு 1, 2, 3, 4, 8, 9, 12, 13, 14 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். ஜுலை 28, 29 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

10. மகரம் :- உத்திராடம் ¾ - திருவோணம் - அவிட்டம் ½
( போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. கா. கி - )

மகரராசி 9 பாதங்களும் மிச்சிர பலனுக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் நல்ல பண வருமானம் வரும். சகோதரர் புத்திரர் சம்பந்தமாக நல்ல ஏற்பாடுகள் நடக்கும். பூமியில் இயந்திர சாதனங்களில் அபிவிருத்திபலன் ஏற்படும். வீடு வாகனங்களில் ஆகஸ்டு 3வுக்குச் சீர்திருத்தமும் வசதியும் ஏற்படும். ஒரு திரண்டபொருள் கைக்கு வரும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். ஜுலை 19, 20, 26, 27, 28, 29 ஆகஸ்டு 3, 4, 5, 6, 7, 10, 11, 15, 16 தேதிகளில் தனுதாயம், ஜெயம், பொதுச்சொத்துப் பராமரிப்பு ஆகிய நற்பலனை ஏற்படுத்தும் ஜுலை 30, 31 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

11. கும்பம் :- அவிட்டம் ½ - சதயம் - பூரட்டாதி ¾
( கு. கே, - கோ. ஸ. ஸி. ஸு. - ஸே. ஸோ. தா. )

கும்பராசி 9 பாதங்களும் சுபபலனுக நடக்கும். குடும்பத்தில் நல்ல தனவருமானம் வரும். வித்தியா வியாபாராதிகளில்

கலைத்துறையில் முன்னேற்ற ஸ்திதியும் உத்தியோகத்தில் பதவி உயர்வும் அளிக்கும். பூமி இயந்திரங்களில் ஜூலை 30௳ முதல் அபிவிருத்திபலனை உண்டுபண்ணும். புத்திர பிராப்தி ஏற்படும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். ஜூலை 16, 17, 21, 22, 29, 30, 31 ஆகஸ்டு 6, 7, 8, 9, 12, 13, 14 தேதிகளில் தனதாயம் காரிய ஜெயம், பிரவிருத்திகளில் நவீனம் ஏற்படுதல் ஆகும். ஆகஸ்டு 1, 2 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

12. மீனம் :- பூரட்டாதி ¼ - உத்திரட்டாதி - ரேவதி.

( தி. - து. ஸ. ச. த. - தே. தோ. ச. சி. )

மீனராசி 9 பாதங்களும் மிச்சிர பலனை நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் தனவருமானங்கள் நல்ல ஸ்திதியை ஏற்படுத்தும். சகோதரர் புத்திரர்களுக்கு உயர்வு தரும். ஒப்பந்தம் எழுத்துமூல விஷயங்களில் நல்லன ஏற்பட்டுவரும். ஜூலை 30௳ முதல் பூமிபிராப்தியில் இயந்திர சாதனங்களில் அபிவிருத்தி பலனை உண்டுபண்ணும். வீடு வாகனங்களில் நல்ல சௌகரியம் தரும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். ஜூலை 18, 19, 20, 23, 24, 25, 30, 31 ஆகஸ்டு 1, 2, 8, 9, 10 11, 15, 16 தேதிகளில் தனதாயம் மிகுந்த சௌகரியம் தரும். ஆகஸ்டு 3, 4 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

---

## மூன்றுவித நட்சத்திரங்கள்

வானத்தில் மூன்று விதமான நட்சத்திரங்கள் காட்சியளிப்பதைக் கவனித்திருக்கிறீர்களா ?

நீலநிறமாகச் சுடர்விடுவன சில. வெள்ளை நிறமாக மின்னுவன உண்டு. பின் சிவந்தநிறமான நட்சத்திரங்களையும் காணலாம். சிவந்தநிற நட்சத்திரங்கள் பூமிக்குச் சமீபத்தில் உள்ளன. வெள்ளைநிறமானவை மேலும் தூரத்தில் உள்ளன. நீலநிறமானவை நெடுந்தொலைவில் உள்ளன. வானவெளியில் இதனைக் கவனித்துப்பாருங்கள்; தெரியும்.

# திருக்குறிப்புத்தொண்டர்

வித்துவான் திரு. கா. ம. கண்ணப்பன் எம். ஏ.,

[தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம், 8—6—1984 ஆங்கிலமாத முதல் ஞாயிறன்று வழங்கிய அருளுபதேசத்தை ஒட்டி எழுதப்பெற்ற கட்டுரை. ]

முற்பகல் மணி 9-30. ஆதீனத்திருமடத்தை நோக்கிப் புறப்பட்டேன், குருமணிகளின் அருளுரைபெறும் இனிய வாய்ப்பை எண்ணியவாறு,

பூசை நிறைவுற்றது! குருமணிகள் பண்டாரக் கட்டில் இருக்கின்றார்கள்!

அஷ்டலட்சுமிக் கட்டில் - அதுதான் பூசைமடத்துக்கு எதிரில் பந்திக்கட்டுக்கு முன்னால்இருப்பது - அங்கே ஒருதூண் ஓரம் நின்றேன்! தூணில் தமிழ் எண்கள் காணப்பட்டன! அடியேனுக்கு மிகவும் ஆச்சரியம்! அந்த எண்களை எப்படிக் கூட்டினாலும் 15 என்ற விடையல்லவா வருகிறது! கதை சொல்லும் தூண்கள் என்பார்கள்! நாதம் தரும் தூண்கள் என்பார்கள்! தருமையில் கணிதவிந்தை காட்டும் தூணைக் கண்டேன்; சிற்பி அந்த அற்புதக்கணக்கைத் தூணின் ஒரு பகுதியில் சதுரக்கட்டத்துக்குள்ளே வந்த எண்ணே திரும்ப வராமலும், 10க்குள் உள்ள எண்களைக் கொண்டும் எத்தனை அழகாகக் காட்டிவிட்டான்!

| | | |
|---|---|---|
| ௮ (8) | ௩ (3) | ௪ (4) |
| ௧ (1) | ௫ (5) | ௯ (9) |
| ௬ (6) | ௭ (7) | ௨ (2) |

கீழிருந்து மேலும் பக்கவாட்டிலும் ஓரத்திலிருந்து எதிரிலும் கூட்டிப்பார்த்தேன் – கூட்டல்தொகை 15. குருவருள் துணை நின்ற சிறப்பின் அற்புதத்தை வியந்து நின்றிருந்த அடியேன் அன்பர்கள் சுறுசுறுப்புடன் பண்டாரக்கட்டை நோக்கிச் செல்வதைக் கண்டேன்; சென்றேன், தரிசித்தேன் குருமணிகளை! விழுந்து வணங்கினேன்; திருநீறு பெற்றேன். பிரார்த்தனையை அடுத்து குருநாதர் உபதேசம் அருளினார்கள்.

அன்று வைகாசிப்பூசம்; சேக்கிழார் நமிநந்தியடிகள் குருபூசைத் திருநாட்கள்! திரிகரண சுத்தியோடு அவர்கள் ஆற்றிய தொண்டுகளை நினைவு கூர்ந்தார்கள். 63 நாயன்மார் களைப்பற்றி விளக்கம் செய்த சேக்கிழார் குருபூசை நாள் இது என்றும் "நீரால் விளக்கிட்டமை நீள்நாடு அறியுமன்றே" என்று போற்றப்பெற்ற நமிநந்தியடிகள் நாள் இது என்றும் நினைவுக் குறிப்புக்கள் நல்கினார்கள்.

குருமணிகள் நாயனார் வரலாறு அருளத் தொடங்கினார்கள். "தொண்டை நாட்டில் காஞ்சிபுரத்தில் திருக்குறிப்புத் தொண்டர் அவதரித்தார்! அதே தொண்டை நாட்டில் குன்றத்தூரில் சேக்கிழார் அவதரித்தார்"

குருமணிகளின் இந்தக்குறிப்பு ஒருகாரணத்தை விளக்குவதற்காகவே எழுந்தது.

'திருக்குறிப்புத் தொண்டர் புராணத்தைச் சேக்கிழார் விரிவாக அருளியமைக்கு இதுவே காரணம்" என்ற எண்ணம் நிலவுவதைச் சுட்டி அதுவே காரணமன்று என்பதைச் சமய வழிச்சிந்தனையாக – சமுதாய சீர்திருத்த நோக்குடன் அருளிய போது நம் உள்ளம் 'உண்மைதான்' என உணர்கிறது!

இடையில் திருக்குறிப்புத்தொண்டர் குலம்பற்றி அருளிச் செய்தார்கள்; தொண்டர் ஏகாலியர் – அதாவது – துணிகளை ஒலித்துக் கொடுக்கும் பெருவண்ணார் – என உணர்த்திச் சாதி குலம்பற்றிச் சிந்தியாது சிவநெறி வளர்த்த சீரியோர்பற்றிக் குறிப்பிட்டார்கள்.

"சாதிச்சண்டாளராகச் சிலர் இருப்பினும்தம் கருமங்களைச் செய்யாத கர்மச்சண்டாளர் மிகவும் கீழானவர்" என்ற குறிப்பை அளித்து உயர்நெறி பற்றி ஒழுகினால் அனைவரும் மேலோர் ஆவர் என்று திருவாய் மலர்ந்தார்கள்.

"உயர்ந்த சாதியினராயினும் உணரவைக்கவும், தாழ்ந்த சாதி எனக் கூறப்படுவோரில் உயர்ந்த நெறிகொண்டு வாழ்ந்த

வரைக்காட்டி, அவர்மூலம் அச்சாதியினை உயர்த்தவும் சேக்கிழார் நாயன்மார் வரலாறுகளைச் சிறப்புடன் செய்து உள்ளார் " என்று அருளியபோது குருமணிகளின் நுட்பமான சிந்தனை நம்மைத் திகைக்கச் செய்கிறது!

இங்ஙனம் நாயன்மார் குலம் பற்றிய சிந்தனைகளை அருளிச் சேக்கிழார் திருக்குறிப்புத் தொண்டர் புராணத்தை விரிவாகச் செய்தமைக்கான காரணத்தை மிகத்துல்லியமாக விளக்கு கிறார்கள். அவர்களது அந்தச் சிந்தனையில் அன்னையின் பெருமை, சிவபூசைச்சிறப்பு முதலிய பல தத்துவங்கள் இழை யோடி மனத்துக்கு இதமளிக்கின்றன.

குருமணிகள் உபதேசிக்கிறார்கள். "உலக மாதா, உயிர் கட்காக, நமக்காக இறைவனை வழிபட்டதலம் தொண்டை நாட்டில் உள்ள காஞ்சிபுரம் " " வாய்மையைக் காப்பதற்காக எழுபது வேளாளர்கள் உயிர்நீத்தது தொண்டை நாட்டில் தான் " "தொண்டைநாடு சான்றோருடைத்து " இப்படித் தொண்டைநாட்டின் பெருமைகளை அடுக்கிக் கொண்டே விளக்கம் தந்தவாறு – நம்மைத் திகைக்கச் செய்தார்கள்! ஆம் ... ஆம் என ஒவ்வொன்றையும் ஆமோதிக்கிறது மனம்!

வேணியார் அருள் செய்ய, எண்ணிலாத ஆகமங்களின் திறங்களை இறைவரிடம் கேட்டார் அம்மையார்! "தாம் விரும்பும் உண்மையாவதுபூசனையே" என இறைவன் உரைத்தருளினன்,, 'அருச்சனை புரியஎண்ணினுர்; அம்மையார்விருப்பம் அறிந்தார் பெருமான்; அம்மையார் வேண்டினர்; பெருமான் 'காஞ்சியில் மாமரத்தின் கீழிருக்கும் நம் கோயிலை அடைந்து பூசை செய்க' என அருளினர்.

பெருமாட்டி காஞ்சிநகர் அடைந்தார், பெருமானைச் சிவாகம விதிப்படி பூசித்தார்! பெருமான் விளையாடல் செய்ய எண்ணினர்; கம்பையாற்றில் திடீரென வெள்ளம் பெருகிற்று! வளையல் அணிந்த திருக்கரத்தால் பெருமானை இறுகத் தழுவினர்! பெருமான் வளைத்தழும்பும் முலைச்சுவடும் பெற்றார்.

வரலாற்றின் இடையே குருமணிகள் அரியகுறிப்புக்களையும் நம் பொருட்டு அருளினர்கள்.

"எல்லாமாய் இருக்கிறன் இறைவன்; மண்ணிலும், நீரிலும், தீயிலும் மற்றவற்றிலும் அதுவாகவே கலந்திருப்பவன் கடவுள்

"ஒன்று நீயல்லை; அன்றி ஒன்றில்லை" என மணிவாசகர் அருளியது போன்று அதுவாகவே இருக்கும் பெருமானை மணலால் இலிங்கம் அமைத்துப்பூசித்தார் அம்மையார். திருவாரூர்பிருதிவித் தலம் என்பர்; காஞ்சியும் பிருதிவி என்பதை அன்னை பூசித்துக் காட்டி உலகத்துக்கு அறிவித்தார்! தாய் தானே முதலில் அறிவிப்பவள் — இப்படி விளக்கம் அருளிய குருமணிகள் சமுதாய எதிர்நோக்குதலையும் அறிவிக்கின்றார்கள்.

"எவன் ஒருவன் தன்னை உய்விக்கின்றானே அவனை நினைந்து வழிபட வேண்டும். "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம், உய்வில்லை செய்ந்நன்றி கொன்றமகற்கு" என்பது வள்ளுவர் வாக்கு. இதனை உலகுக்கு உணர்த்தவே அன்னை பூசித்தார்.

குருமணிகள் வரலாற்றைத் தொடர்கிறார்கள். தம்மை அன்போடு சிவாகமநெறிப்படி பூசித்த அம்மைக்கு இறைவன் அருள்கின்றார். வேண்டிய வரங்களைப்பெறுக என்றார். "இன்று அடியேன் தொடங்கிய பூசை நிறைவுறுமாறு அருள்க" என வேண்டினர் அம்மையார். பெருமான் "நம்பால் நின்பூசனை என்றைக்கும் முடிவதில்லை" என்று அருளினார். இப்பகுதியை புராணப்பாடல் வாயிலாக விளக்கும் போது உலகியல் உதாரணங்கள் பலவற்றை மேற்கோளாக்கிப் பூசைச் சிறப்பை மனம் கொள்வித்தார்கள்.

இறைவனிடம் பலவரங்கள் பெற்ற அம்மையார், பெருமான் அளித்த இருநாழி நெல் கொண்டு முப்பத்திரண்டறம் வளர்த்தார்; காமக்கோட்டத்தில் வீற்றிருந்தருளினர்.

இப்படி அம்பிகை இறைவனைப்பூசித்தமையால் தொண்டை நாடு சிறப்புறப் பெற்றது என அருளிப்

"பெற்றதாயும் பிறந்த பொன்னாடும்
நற்றவ வானினும் நனிசிறந்தனவே"

எனப் பாரதியார் கூறியது போலத் தாயாரையும் மதிக்க வேண்டும்; தாய்நாட்டுப் பற்றும் வேண்டும். ஆகவே தான் சேக்கிழார் திருக்குறிப்புத் தொண்டர் புராணத்தை, திணை மயக்கம், ஐந்திணைவருணனை முதலியவற்றை அருளிவிரிவாகச் செய்தார் எனக் கருதலாம். குருமணிகளின் இந்த விளக்கம் நுட்பமானது! அனைவரும் ஒப்ப முடிந்தது!

சிவபூசை, அருச்சனை முதலியவற்றுக்கு இடையிடையே அற்புதமான மேற்கோள்களும் விளக்கங்களும் அளித்தார்கள். சிவபூசை என்பது மலர்பறிப்பது முதல் எல்லா நிலையையும் குறிக்கும் என்ருர்கள். மந்திரி வேலையிலிருந்து வயல் வேலை வரை அரசாங்கப் பணியாவது போலவே சிவபூசையும் எல்லா வற்றையும் உள்ளடக்கியது என உலகியல் உதாரணம் தந்து விளக்கினுர்கள்.

இப்படிப் பல சிந்தனைகளை வழங்கிய குருமணிகள் பழைய னூர் நீலியின் வரலாற்றைச் சுருக்கமாக அருளித் திருக்குறிப்புத் "தீய என்பன கனவிலும் தூயமாத்தர்வாழ்" பழையனூர் நீலிக்கு ஏற்ப அங்கே தொண்டை மண்டலத்தைப் தொண்டர் வரலாற் றுத்தத்துவ நெறியைப் புலப்படுத்தினுர்கள்.

" காஞ்சிபுரத்தில் வண்ணுர் குலத்தில் அவதரித்த திருக் குறிப்புத் தொண்டர் தம் குலமுறைக்கு ஏற்ற தொண்டு ஆற்றி யவர்; அதனை இடைவிடாது செய்தவர். சிவனடியார்களின் ஆடை அழுக்கைக் குறிப்பறிந்து வேண்டிப் பெற்றுத் துவைத்துக்கொடுத்து வந்தார். பெருமான், நாயனுர் தொண்டை உலகுக்கு அறிமுகப் படுத்த எண்ணினுர்; அருள் புரிய விரும்பினுர்.

ஓர் ஏழைக்கோலம் பூண்டார் பெருமான்; அழுக்காடை அணிந்தார். ஒரே கந்தையுடன் சிவவேடத்துடன் புறப்பட்டு அன்பர்முன் தோன்றினுர். அன்பர் அழுக்கினைப் போக்க ஆடையைத் தருமாறு வேண்டினுர். 'மாலைக்குள் துவைத்துக் காயவைத்துக் கொடுப்பதானுல் தருகிறேன். உடன்பெற்றுச் செல்லும், என்ருர், ஏழை வடிவில் வந்த பெருமான். அன்பர் ஆடைபெற்ருர்; முதலில் அழுக்கினைத் தடாகத்தில் சிறிது போக்கி வெள்ளாவியில்வைத்துஒலிக்க (துவைக்கப்) புகுந்தார்; மேகங்கள் திரண்டன; பெருமழை பெய்தது. காலையும் சென்றது; நண்பகலிலும் ஓய்ந்த பாடில்லை; மாலையும் வந்தது. பெருமான் அருள் மழையல்லவா அது! அன்பர் அந்திக்குள் ஆடையைத் தருவதாகக் கூறிய வாக்கை நினைத்தார்; மனம் உடைந்தார். இரவுவரை மழை ஓய்ந்தபாடில்லை. 'தொண்டனுர் குளிரில் நடுங்குவாரே' என மனம் பதறினுர். நான் செய்ய வேண்டுவது இதுவே' எனக் கூறிக் கந்தையைத் துவைக்கும் கற்பாறையின் மீது தலையை முட்டிக் கொள்ளப் புகுந்தார். கற்பாறையின் பக்கத்திலிருந்து வளைத்தழும்பரின் ஏகாம்பர நாதரின் மலர்ச்செங்கை அன்பர் தலையைப் பிடித்து நிறுத்தியது; பெருமான் காட்சிதந்தருளினுர்.

குருமணிகள் வரலாற்றுக்கு ஊடே சில விளக்கங்களை அருளினார்கள் !'பெருமாட்டி பூசை புரிந்தபோது திடீரென வெள்ளம் வந்ததுபோலவே அன்பர் தொண்டுபுரிந்த போதும் திடீரென மழை வந்தது' என ஒப்புமைப்படுத்தி அருளியபோது இறையருள் வெள்ளம் எப்படி எல்லாம் துணைபுரிகிறது என எண்ணிவியக்கிறோம்.

நந்தனார் தம்மரபுக்கு ஏற்ற தொண்டு புரிந்தது போலவே திருக்குறிப்புத் தொண்டரும் மரபுக்கேற்பத் தொண்டு புரிந்த மையையும் விளக்கினார்கள்.

எழுபதுபேர் சொன்னசொல்காக்க முடியாமல் உயிர்விட்ட நாட்டில் சொன்ன சொல் காவாமல் வாழ்வது நல்லதன்றுஎன்று கல்லிடை தம் தலையை மோதச்சென்றார் என்று குருமணிகள் கூறியபோதுஉணர்ச்சியும்பக்தியும் மேலிடக்கண்கள்கலங்கின.

மேற்கோள்கள், புதிய கருத்துக்கள், ஆய்வுரைகள், வரலாறுகள் எல்லாம் பொருந்த குருமணிகள் அருளிய உபதேசம் நம்வாழ்வின் அழுக்கைப்போக்க வல்லது! உய்விக்கவல்லது!

'கேட்டுப்பயன் பெற்றோம்' என்பதோடு, 'கேட்டுப் பயன் பெறுவோம்' எனச் சிவபுண்ணியப்பேறு பெற நம்மைத் தயராக்கிக்கொள்வோம்.

மங்கல வாழ்த்துடன் உபதேசம் நிறைந்தது; கனிவோடு கனிச்சாறு தந்தார்கள். மகிழ்வோடு பருகி மனநிறைவோடும் இல்லம் திரும்பினோம்.

வாழ்க குருமணிகள் ! வளர்க அருள் !!



# செய்திகள்

## ஆயில்ய வழிபாடு

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் ஜன்ம நட்சத்திரமாகிய ஆயில்யத் திருநாளில் தேவாரப்பாடல்பெற்ற சிவத்தலங்களில் சிறப்பு வழிபாடுகள் நிகழ்ந்துவருகின்றன. அன்பர் பலரையும் இறைவழிபாடு நெறியில் ஈடுபடுத்திவரும் ஆலயத்திருநாள் ஆலய வழிபாடு இம்மாதம் 2—7—84 அன்று திருத்தினைநகரில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் பாடல்பெற்ற சிறப்புடையது இத்தலம். இத்தலத்து சுவாமி அம்பாளுக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றது. 'திருத்தினைநகர்த் திருப்பதிகம்' என்ற நூல் வெளியிடப்பெற்றது. தலத்திருப்பதிகப் பாராயணம் நடைபெற்றது. தருமையாதீனத் தமிழ்ப்புலவர் வித்துவான் திரு வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ., தலச் சிறப்புக்கள்பற்றி விரிவுரை ஆற்றினர். அன்பர் பலர் வழிபாட்டில் கலந்து கொண்டு பயன்பெற்றனர்.

## குருவருளும் அருளுபதேசமும்

ஒவ்வொரு ஆங்கில மாதத்திலும் முதல் ஞாயிறன்று காலை சரியாக பத்து மணிக்குத் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தை அன்பர்கள் வணங்கி வழிபட்டு அருளுபதேசம் பெறும் பிரார்த்தனை வழிபாட்டுக்கூட்டம் ஆதீனத்திருமடத்தில் நிகழ்ந்துவருகின்றது. இம்மாதம் 1—7—84 அன்று 37 ஆவது வழிபாட்டுக் கூட்டம் சிறப்பாக நடைபெற்றது. அன்பர்கள் திருநீறு பெற்றணிந்தபின் தேவாரப் பண்ணிசையும் கூட்டுப் பிரார்த்தனையும் நிகழ்வுற்றன.

இம்மாதம் திருத்தொண்டர்புராணச் சிந்தனையாகச் சண்டேசுரநாயனர் புராணம் உபதேசிக்கப்பட்டது சண்டேசநாயனர் புராணத்தத்துவச்செறிவோடுகுருமணிகள் விளக்கியருளினர்கள் சேய்ஞலூர் 'முருகப்பெருமானல் பூசிக்கப்பட்ட தலம் என்றும், முருகனல் நல்ல ஊர் என அருளிச் செய்யப்பட்டமையால் சேய்ஞலூர் ஆயிற்று என்றும் விளக்கம் அருளினர்கள்.' மேலும் சேக்கிழார் அருளிய "செம்மை வெண்ணீற்று ஒருமையினர்" என்ற பாடலைச் சிறப்பான முறையில் விளக்கியருளினர்கள்.

ஞானசம்பந்தர், சுந்தரர் ஆகிய இருவரும் எச்சதத்தன் சிவலிங்கத்தைச் சிதைத்ததாகக் கூறியமை உண்மைநிலை உரைப்பதாக உள்ளது எனவும் சேக்கிழார் இதனைக் கூருமை "ஒழுக்கம் உடையார்க்கு ஒல்லாவே, தீயவழுக்கியும் வாயாற் சொலல்" என்ற மரபுகாத்ததாகவும் அமைந்துள்ளது என அருளியமை சிறப்பான திறனாய்வுநோக்கில் அமைந்து சிந்தனைக்கு விருந்தாக அமைந்தது.

மயிலாடுதுறை நகரப்பெருமக்களும் அன்பர்களும் கலந்து கொண்டு பயன்பெற்றனர் அடுத்து 38 ஆவது அருளுபதேசம் 5—8—84 அன்று நிகழ்வுறும். அன்பர்கள் கலந்து கொண்டு பயன்பெறுக.

## திருஞானசம்பந்தர் திருக்கல்யாண விழா

தருமையாதீனத்திற்குச் சொந்தமான ஆச்சாள்புரம் என வழங்கும் திருப்பெருமணநல்லூர் ஸ்ரீ சிவலோகத்தியாகராஜ சுவாமி ஆலயத்தில் ஸ்ரீ திருஞானசம்பந்தர் திருக்கல்யாண விழாவும் சிவஜோதி தரிசனமும் தேவஸ்தானத்தின் தேவார வகுப்பு ஆண்டு விழாவும் 13—6—84 புதன்கிழமை மிகச் சிறப்பாக நடைபெற்றன. அன்று காலை 9-00 க்கு மேல் 10-க்குள் கடகலக்னத்தில் ஸ்ரீ திருஞானசம்பந்தர் உபநயனமும், மாலையில் மாலை மாற்று ஊஞ்சல் நிகழ்ச்சியும் இரவு 10மணிக்கு மேல் 11 மணிக்குள் கும்பலக்னத்தில் ஸ்ரீ திருஞானசம்பந்தர் திருக்கல்யாணமும் இரவு 4 மணிக்கு மேல் சிவஜோதி தரிசனமும் நடைபெற்றன. புஷ்பப்பல்லக்கில் திருவீதியுலா வருதலும் பேரின்பப் பேறளிக்கும் திருப்பதிகம் ஓதுதலும் விழாவையொட்டி நிகழ்ந்தன. மாலை 6 மணிக்குத் தேவாரவகுப்புஆண்டுவிழாவையொட்டித் தருமையாதீனப்புலவர் திரு. வி சா. குருசாமிதேசிகர் எம். ஏ.. 'திருமணத் தத்துவம்' பற்றியும் வித்துவான். திரு, சொ. முத்தையன் எம். ஏ., 'திருஞானசம்பந்தர் திருமணம். பற்றியும் விரிவுரையாற்றினர். தேவாரவகுப்பு மாணவ, மாணவிகட்குப் பரிசு வழங்கப்பட்டது. அன்பர் பலர் கலந்துகொண்டு வழிபாடு செய்தனர்.

## ஸ்ரீ திருஞானசம்பந்தர் குருபூஜை விழா

தருமையாதீனம் ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயிலில் ஸ்ரீ திருஞானசம்பந்தர் குருபூஜை விழா வைகாசி மூலநாள் கூடிய 14—6—84 வியாழக்கிழமை அன்றுமிகச்சிறப்பாகநடைபெற்றது. காலை 8 மணி அளவில் சமயாசாரியர்களுக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில்

காலை, மாலை இரு வேளைகளிலும் எழுந்தருளி வழிபாடாற்றினர்கள். காலை ஆராதனைகளையடுத்துத் திருத்தொண்டர் புராணத்தில் ஸ்ரீ திருஞானசம்பந்தர் புராணம் பாராயணம் செய்யப்பெற்றது. மாலை6 மணியளவில் தருமையாதீனத்தமிழ்ப்புலவர் வித்துவான் திரு. வி. சா. குருசாமிதேசிகர் எம். ஏ, வித்துவான் திரு. கா. ம. கண்ணப்பன் எம். ஏ, ஆகியோர் திருக்கோயிலில் அற்புத விளக்கவுரை யாற்றினர். இரவு தேவாரப் பண்ணிசை பாராயணத்துடன் ஸ்ரீ திருஞானசம்பந்தர் திருவீதியுலா நிகழ்வுற்றது. அன்பர்கள் கலந்துகொண்டு வழிபட்டுப் பயனுற்றனர்.

## நாயன்மார் குருபூஜைத் திருநாள்

தருமையாதீனத்திற்குச் சொந்தமான தருமபுரம் ஸ்ரீ ஞானபுரீசுவர சுவாமி திருக்கோயிலில் வைகாசிப் பரணி நாளில் (28—6—84) நம்பியாண்டார்நம்பிகள், பூசநாளில் (3—6—84) நமிநந்தியடிகள், சேக்கிழார்சுவாமிகள், ஆயில்யநாளில்(4—6—84) சோமாசிமாறர். மூலநாளில் (14—6—84) ஸ்ரீ திருஞானசம்பந்தர், முருகநாயனர், திருநீலநக்கர், திருநீலகண்டயாழ்ப்பாணர் குருபூஜைகள் சிறப்பாக நடைபெற்றன. குருபூஜைநாட்களில் ஸ்ரீநடராஜமூர்த்திக்கு அருச்சனை, சிறப்புவழிபாடுகள் நிகழ்த்தப் பெற்றன. தருமையாதீனம் ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர், வித்துவான் திரு கா. ம கண்ணப்பன் எம. ஏ. புராணம் வாசித்து வரலாறு கூறினர். தேவார பாடசாலை ஆகம பாடசாலை ஆசிரியர்களும், மாணவர்களும் அன்பர்களும் கலந்து கொண்டு பயன் பெற்றனர். புராண விரிவுரைக்குப்பின் அன்பர்கட்குப் பிரசாதம் வழங்கப்பட்டது.

## திரிசிரபுரச் சைவசித்தாந்த சபை நூற்றுண்டு விழா

வைகாசி 14-ஆம் நாள் (27—5—84) ஞாயிற்றுக்கிழமை ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திரிசிரபுரச் சைவ சித்தாந்தசபை நூற்றுண்டு விழாவிற்கு எழுந்தருளினர்கள்.

முற்பகல் 11 மணியளவில் திருச்சிராப்பள்ளி அருள்மிகு தாயுமானவர் திருக்கோயில் முகப்புமண்டபத்திற்குத் தருமபுரத்திலிருந்து ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் எழுந்தருளிய உடன் பூரணகும்ப மரியாதையுடன் அன்பர்கள் வரவேற்றனர் திரு எழுந்தருளுதல் அருளிப்பாடு பிரசாதம் பார்த்துக்கொண்டு, ஸ்ரீ மௌனமடத்துத் தலைவாயிலில் உள்ள ஸ்ரீ செல்வமுத்துக் குமார சுவாமியை வழிபட்டுத் திருமடத்திற்கு எழுந்தருளிக் கொலுக்காட்சி அளித்தார்கள் அன்பர்கள் வழிபட்டுப்பிரசாதம் பெற்றுக்கொண்டார்கள்.

நண்பகல் 12 மணியளவில் அன்பர்கள் புடைசூழ, மலைக் கோயில், உச்சிவிநாயகப் பெருமானையும், அருள்மிகுதாயுமான ஈசரையும், அருள்மிகு மட்டுவார் குழலம்மையையும், பரிவார தெய்வங்களையும், தேவார இசையும் வேதபாராயணமும் நிகழ வழிபட்டு ஸ்ரீ மௌனமடத்திற்கு எழுந்தருளினர்கள் ஸ்ரீ மௌனமடத்தில் மகேசுவரபூசை, மிகவும் சிறப்பாக நடைபெற்றது.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள், கண்டுவழிபட வந்த, திருச்சி நகரத்துப்பலதுறை அன்பர்களுடன் உரையாடி மகிழ்வித்தார்கள்.

மாலை 5-31 மணிக்குக் கீழரண்சாலை ஸ்ரீ நன்றுடையான் விநாயகர் திருக்கோயிலுக்கு எழுந்தருளினர்கள். அங்குத் திரிசிரபுரச் சைவசித்தாந்த சபையார், ஏற்பாடு செய்திருந்த பூரணகும்ப வரவேற்பினை ஏற்றுக்கொண்டு, ஸ்ரீ நன்றுடையானை வழிபட்டார்கள். அங்கு எழுந்தருளியிருந்த திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து 23ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகளுடன் திருவுலாப் போந்தருளினர்கள்.

சமயபுரம், திருஆனைக்கா, திருவரங்கம், மலைக்கோயில் யானைகள் சகல அலங்காரங்களுடன் முன்னே செல்ல, திருச்சின்னம் ஒலிக்க மலைக்கோயில் நாதசுரக்கலைஞர், பேரையூர் திரு. சுப்பிரமணியம் தன் குழுவினருடன் நாதசுரஇசை இசைத்திட, திருச்சிராப்பள்ளிப் பெரும்புகழ்க் கலைஞர் திரு. ஏ. கே. சி. நடராசன் தன் குழுவினருடன் 'கிளாரினெட்' வாசிக்க, வாண வெடி, வானில் வெடித்து முழங்கிட, திருநந்தி முன்னே செல்ல, படைக்கலப் பரிவாரங்கள் அணிசெய்ய, பட்டுக்குடை நிழற்ற திருமுறைவாணர்களின் திருமுறை இன்னிசை நிகழ, திருச்சி நகரத்து ஆண், பெண் சைவநெறி இளைஞர், முதியோர் வரவேற்றுச் சூழ்ந்துவர, கீழரண்சாலை, புகழியப்பிள்ளைத் தெரு, சின்னக்கடைத்தெரு வழியாக ஸ்ரீ மாணிக்கவிநாயகர் திருக்கோயிலை அடைந்தார்கள்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள், திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்துடன் திருவுலாக்காட்சியாகத் திருச்சி நகரவீதிகளில் வந்தபோது, நகர அன்பர்கள், ஆர்வத்துடன் வரவேற்று வழிபட்டனர். பலஇடங்களில் பூரணகும்பம் வைத்து வணங்கி மகிழ்ந்தனர். சின்னக்கடைத் தெருவில் உள்ள திரு. A. P. A. பித்தளைப் பாத்திர நிறுவனத்தினரும், திரு. A. P. A. ஜுவல்லரி நிறுவனத்தினரும்,

திரு. தைலா முதலியார் ஜவுளி நிறுவனத்தினரும் பெரும்பொருட் செலவில் திருக்காவணமாம் நடைப்பந்தர் அமைத்துத் தோரணங்கட்டி, பழக்குலை ஏற்றி, வரவேற்புப் 'பதாகை' உயர்த்தி, தங்கள் இல்லத்து பெண்கள், உற்றார் உறவினருடன் மிகவும் சிறப்பாகப் பூரணகும்பம் வைத்து வரவேற்று வழிபட்டு மகிழ்ந்தார்கள்.

ஸ்ரீ மாணிக்கவிநாயகப்பெருமானைவழிபட்டு, இரு குருமகா சந்நிதானங்களும் மலைக்கோயில் நூற்றுக்கால் மண்டபத்திற்கு எழுந்தருளி அன்பர்கட்குக் கொலுக்காட்சி வழங்கினர்கள்.

திரிசிரபுரச் சைவசித்தாந்த சபையின் தலைவர் திரு. பு. முக்கப் பிள்ளை வரவேற்க, நூற்றுண்டு விழாக் குழுத்தலைவர் திரு. கி. ஆ பெ. விசுவநாதம் தொடக்கவுரை நிகழ்த்தினர்.

சபையின் நூற்றுண்டு விழா மலரை ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் பலவாறு பாராட்டி வெளியிட்டருளினுர் கள். தினமலர் ஆசிரியர் திரு. இராகவன் அவர்கள் மலரைப் பெற்று மகிழ்ந்தார்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள், திரு. தைலா முதலியார் நிறுவனத்தினர் மிகச்சிறப்பாக வரைவித்து உதவிய யாழ்ப்பாணம்நல்லூர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்கள் படத்தைத் திறந்து வைத்தார்கள். ஸ்ரீ ஆறுமுக நாவலரின் பெருமைகளைப் பாராட்டினுர்கள். தொடர்ந்து திரிசிரபுரச் சைவசித்தாந்த சபை நூற்றுண்டு விழா நிறைவுரையாக அருளாசியுரை நிகழ்த்தினுர்கள். நினைந்து போற்றுதற்குரியதாக அமைந்த அவ்வுரை, காலத்தை வென்று நிலைக்கும் என்பதில் ஐயமில்லை.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள், சைவநெறி அன்பர்கள், நாள்தோறும் வழிபாடுநிகழ்த்த வேண்டும்என்றும் திருமுறைகளில் ஈடுபாடு கொள்ளவேண்டும் என்றும், போலியான வாழ்வு கூடாது என்றும் அருளித், திரிசிரபுரச் சைவ சித்தாந்த சபையினைப் பாராட்டினுர்கள். சைவநெறி குறித்தும், சைவசித்தாந்தநெறி குறித்தும், ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள், விளக்கியதுடன் திருமூலர் திருமந்திரத்திலிருந்தும், பெரியபுராணத்திலிருந்தும் எடுத்துக்காட்டுகள்கூறி விளக்கியது, பொருட்செறிவு உடையதாக இருந்தது.

நூற்றுண்டுவிழாவைச் சிறப்புற நடத்திய விழாக்குழுத் தலைவர் - சபைத்தலைவர் ஆகியோர்க்கு ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் பட்டுச்சாதராக்கள்போர்த்தி, வாழ்த்தினுர்கள். விழாவில், சைவநெறி யன்பர்கள், ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களிடம் திருநீற்றுப் பிரசாதம் பெற்று மகிழ்ந்தார்கள்.

இரவு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள், சின்னக் கடைத்தெருவில் உள்ள, A. P. A. பித்தளைப் பாத்திரக்கடைக்கு வேண்டுகோட்கு இணங்கி எழுந்தருளினர்கள். நிறுவன உரிமையாளர் திரு. வெங்கடாசலம் செட்டியார் அவர்கள் தம் மக்கள், குடும்பத்தாருடன் வரவேற்று வழிபாடு செய்து மகிழ்ந்தார்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம அவர்கள் A. P. A. ஜுவல்லரி நிறுவனத்திற்கும் எழுந்தருளினர்கள். அதன் உரிமையாளர் திரு.இராமலிங்கம்செட்டியார் திரு.குழந்தைவேல் செட்டியார் அவர்கள் வரவேற்று, வழிபட்டு மகிழ்ந்தார்கள். இரவு, ஸ்ரீ மௌனமடத்திற்குத் திரும்பிய ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள், அங்கிருந்த அன்பர்கள் வணங்க, அவர்களை வாழ்த்தியருளினர்கள்.

[ செய்தி : திருச்சி - புலவர் திரு. மு. வைத்தியநாதன்[

---

## தருமையாதீனம்

## ஸ்ரீ அஷ்டாதசபுஜ மகாலக்ஷ்மி துர்க்காபரமேஸ்வரி ஆலய மகாமண்டபத் திருப்பணிக்குக்

## காணிக்கை செலுத்தியவர்கள் விபரம்

| | | |
|---|---|---|
| | 10—3—84 இதழில் வெளியிடப்பட்டது முடிய முன் வரவு ...ரூ. | 36,744—00 |
| 228 | K. வானமாமலையாதவ் சார்ட்டர்ட் இன்ஜினியர் - மதுரை ... | 1000—00 |
| 229 | V. வாசுதேவன்,நுங்கம்பாக்கம்,சென்னை ... | 151—00 |
| 230 | சந்திரசேகரன், பழையமாம்பலம்,சென்னை | 51—00 |
| 231 | B. S. ஜெகதீசன், சென்னை ... | 51—00 |
| 232 | H. தாண்டவராய பிள்ளை, கோவத்தக்குடிபண்ணை கோவத்தக்குடி - மண்ணச்சநல்லூர் ... | 501—00 |
| 233 | A. L. சொக்கலிங்கம், பெங்களுர் ... | 25—00 |
| 234 | மாடர்ன் பெட்ரோல் ஸ்டேஷன், திருச்சி ... | 500—00 |
| 235 | T. A. ராமசொக்கலிங்கம் பிள்ளை, மயிலாடுதுறை | 101—00 |
| 236 | M. N. சொக்கலிங்கம் செட்டியார், குத்தாலம் | 101—00 |
| 237 | K. S. வெங்குசெட்டியார், மயிலாடுதுறை ... | 500—00 |
| 238 | மு. மணி, தருமபுரம் ... | 100—00 |
| 239 | K. ராஜேந்திரன், தருமபுரம் ... | 101—00 |
| 240 | N. V. A. R. சபாநாதன் & பிரதர், விருத்தாசலம் | 251—00 |
| | ஆகக் கூடுதல் ரூ. | 40, 177—00 |